4 பக்கங்கள் 25 காசுகள்

பதிவு எண் எம்: 8798

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 13 மதுரை 21 10—75 செவ்வாய் மலர் 219

## சாலை விபத்துச் சாவுகள்:
## அமெரிக்கா, பிரிட்டனைவிட இந்தியாவில் 15 மடங்கு

ஜெனிவா, அக். 18—

சாலை விபத்துக்களில் மட்டும் ஒவ்வோர் ஆண்டும் உலகத்தில் 2 லட்சத்து 10 ஆயிரம் மக்கள் பலியாகின்றனர் என்று உலக சுகாதார ஸ்தாபனத்தின் ஒரு தகவல் கூறுகிறது.

அமெரிக்கா அல்லது பிரிட்டனில் சாலை விபத்துக்களில் பலியாகும் மக்களைப்போல் 10 முதல் 15 மடங்குக்கும் அதிகமானோர் இந்தியாவில் பலியாகின்றனர் என்றும் அத்தகவல் கூறுகிறது

## அஞ்சல்—தந்தி துறையில் 674 ஊழியர்கள்—வீட்டுக்கு !

புதுடெல்லி, அக், 19—

மத்திய அரசு தகவல் தொடர்பு அமைச்சகத்தின் அஞ்சல்—தந்தி துறையில் மட்டும்இதுவரை 674 ஊழியர்கள் வேலையிலிருந்து கட்டாய ஓய்வு கொடுக்கப்பட்டு வீட்டுக்கு அனுப்பப்பட்டுள்ளனர்.

இவர்களில்—முதல் பிரிவு, மூன்ரும் பிரிவுகளைச் சேர்ந்த தலா ஒருவரும், இரண்டாம் பிரிவைச் சேர்ந்த இருவரும் தவிர மீதமுள்ளவர்கள் அனைவரும்4-ம்பிரிவைச் சேர்ந்தவர்கள் ஆவர்.

## ‘குபேர புரி’ அமெரிக்காவில் கொடுமையான சுரண்டல்

‘செல்வபுரி’ என்றும் ‘சொர்க்கபுரி’ என்றும் புகழப்படும் அமெரிக்க நாட்டில் — உலகிலே ‘ஜனநாயகத்தின் காவலன்’ என்று போற்றப்படும் அமெரிக்க நாட்டில்—

இளஞ் சிறுர்கள் கடுமையாக வேலை வாங்கப் படுகிறுர்கள். ஆனல் குறைந்த கூலியே கொடுக்கப் படுகிறுர்கள். ஈவிரக்கமற்ற முறையில் சுரண்டப் படுகிறுர்கள்.

விவசாயத் தொழிலில்தான் சிறுவர்களும் சிறுமியர்களும் பெருமளவில் உழைப்பில் ஈடுபடுத்தப்படுகிறுர்கள். அதாவது பனிரெண்டரை சதவீதம் பேர்—8தொழிலாளர்களில் ஒருவர் சிறுவர்-சிறுமியர் ஆவர். இவ்வாறு மொத்தம் பணிபுரிபவர்கள் விவசாயத் துறையில் மட்டும் 8 லட்சம்பேர் என்று கணக்கிடப்பட்டுள்ளது.

பல இடங்களில் விவசாயத்தில் ஈடுபடும் இளஞ் சிறுர்களுக்குக் கூலி கூட கொடுக்கப்படுவதில்லையாம் அதற்கு மாருக, அங்கு வேலைசெய்யும் அச்சிறுவர்களது பெற்ருேர்களுக்கு சிறிது கூடுதல் சம்பளம் கொடுக்கப்படுகிறதாம்.

—மேற்கண்ட தகவல்களை அமெரிக்க ஐக்கிய பண்ணைத் தொழிலாளர் தேசியயூனியனின் உதவித் தலைவர் திருமதி தொலார்ஸ் ஹயூவர்டா தெரிவித்துள்ளார்.

—ஆதாரம்: ‘‘எகனுமிக் டைம்ஸ்’’




## தமிழகம் முழுதும் 15, 16, 17 தேதிகளில் போனஸ் அவசரச் சட்டத்தை திருத்தக் கோரி
# பல இலட்சம் தொழிலாளர்கள் பேட்ஜ் அணிந்து பணிபுரிந்தனர்

மதுரை, அக். 18—

போனஸ்குறைப்பு அவசரச் சட்டத்தைத் திருத்தக் கோரி தமிழகம் முழுதும் கடந்த 15,16,17— ஆகிய மூன்று நாட்களிலும் கருத்தாலும்கரத்தாலும் பாடுபடக்கூடிய இலட்சக்கணக்கான உழைப்பாளர்கள் ‘‘கோரிக்கை பாட்ஜுகள்’’ அணிந்து வேலைக்குச் சென்றனர்.

சிஐடியூவைச் சேர்ந்த ஒரு இலட்சத்துக்கும் அதிகமான தொழிலாளர்களும் ஊழியர்களும் இந்த பேட்ஜ் அணியும் இயக்கத்தில் தீவிரப் பங்கு பெற்றனர்.

‘போனஸ் அவசரச் சட்டத்தைத் திருத்துக!

குறைந்த பட்ச போனஸ் 8.33 சதவீதம் என்றிருப்பதைக் குறைக்காதே!

உள்ள உரிமைகளைப் பறிக்காதே!’’

ஆகிய முழக்கங்கள் இந்த பேட்ஜுகளில் பொறிக்கப்பட்டிருந்தன.

கோவையில் கடந்த 7-ந் தேதியன்று இந்தியத் தொழிற் சங்கங்களின் மையம்(சிஐடியூ),அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரஸ் (ஏஐடியூசி), இந்திய தேசிய தொழிற்சங்கக் காங்கிரஸ் [ஐஎன்டியூசி], இந்து மஸ்தூர் பஞ்சாயத் (எம். எம். பி.), இந்து மஸ்தூர்சபா (எச் எம் எஸ் ], தொழிலாளர் முன்னேற்றப் பேரவை [தி. மு க,], அண்ணு தொழிலாளர் சங்கம்[அதிமுக), தமிழ் நாடு தொழிற்சங்க காங்கிரஸ் [டி.என்.டி.யூ.சி),சுதந்திரா தொழிற்சங்கம் ஆகிய 9 சங்கங்கள் விடுத்த கூட்டு அறைகூவலுக்கு இணங்க இந்தபேட்ஜ் இயக்கம் நடந்தது.

பஞ்சாலை,மின்வாரியம், போக்குவரத்து, கைத்தறி, இன்சீனியரிங், சிமெண்ட், தோட்டத் தொழில், நிலக்கரிச் சுரங்கம், சர்க்கரை, டான்சி, தோல் பதனிடுதல், ஸ்தல ஸ்தாபனம், பீடி - சுருட்டு மற்றும் பல்வேறு துறைகளிலும் பணிபுரியும் இலட்சக்கணக்கான தொழிலாளர்கள் கோரிக்கை அட்டைகள் அணிந்து வேலைக்குச் சென்றனர்.

பல இடங்களிலும் — ஆலை, அலுவலக வாயில்களில்நடந்தகூட்டங்கள் மற்றும் ஆர்ப்பாட்டங்களிலும் பங்கு கொண்டனர்.

இந்த பாட்ஜ் அணியும் இயக்கத்தில் தமிழத்தில் சிஐடியூவைச் சார்ந்த இலட்சத்துக்கு மேற்பட்ட தொழிலாளர்கள் கலந்து கொண்டு போனஸ் அவசரச்சட்டத்தால் ஏற்பட்டுள்ள பாதகங்கள் களையப்பட வேண்டும் என்று வற்புறுத்தினர்.

### கோவில்பட்டி

கோவில்பட்டி டிவிசன் முழுவதும் உள்ள மின்வாரியத் தொழிலாளர்களும் ஊழியர்களும் 3 நாட்களும் பேட்ஜ் அணிந்து பணிபுரிந்தனர்.

ஏஐடியூசியை சார்ந்த மின் தொழிலாளர் சம்மேளனத்துக்கு எந்தவித தகவலும் வரவில்லை என்று ஸ்தல சம்மேளன தலைவர் ஒருவர் கூறினுர். ஆனலும் சி ஐ டி யூ தொழிலாளர்கள் கொடுத்த பேட்ஜ்களை அணிந்து கோரிக்கைகளை வற்புறுத்தினர். ஒன்றுபட்டு போராடி வெற்றி பெறுவோம் என்றனர்.

## பலனேதும் இல்லையேல் 24 ந் தேதி வேலைநிறுத்தம்

இந்தக் கோரிக்கை பேட்ஜ் அணியும் இயக்கத்திற்குப் பிறகும், எவ்வித பலனும் ஏற்படாவிடில் அடுத்த கட்டமாக அக். 24ந் தேதியன்று ஒருநாள் அடையாள வேலைநிறுத்தம் செய்வது என்றும் கோவையில் கூடிய 9 சங்கங்களின் பிரதிநிதிகள் முடிவு எடுத்து அறிவித்துள்ளனர். அதன்படி வேலைநிறுத்தம் செய்வதற்கான தயாரிப்புவேலைகளில் அனைத்துத் தொழிற்சங்கங்களும் அனைத்துத் தொழிலாளர்களும் முனைந்துள்ளார்கள் அதற்காகதொழில் நிர்வாகங்களுக்கு வேலை நிறுத்த நோட்டீஸ்களும் கொடுத்து வைத்துள்ளனர்.

### வடாற்காடு மாவட்ட பீடித் தொழிலாளர்கள்

வடாற்காடு மாவட்ட பீடித் தொழிலாளர்கள் சுமார் 40 ஆயிரம் பேர் போனஸ் குறைப்பு அவசரச்சட்டத்திருத்தம், தங்களது கூலி உயர்வு முதலிய கோரிக்கைகளை வற்புறுத்தி வருகிற 24ந் தேதி அடையாள வேலைநிறுத்தம் செய்வது என்று முடிவு செய்துள்ளனர்.

கடந்த 14ந்தேதியன்று தோழர் வே கண்ணன் தலைமையில் வேலூரில் நடந்த வடாற்காடு மாவட்ட சி ஐ டி யூ கவுன்சில், மற்றும் மாவட்ட பீடித் தொழிலாளர் பிரதிநிதிகள் கூட்டத்தில் இம்முடிவு எடுக்கப்பட்டது.

## தலைவர் திணிப்பு இருக்குமானல் காஷ்மீர் மக்கள் கடுமையாக எதிர்க்க வேண்டும்
### தேசிய மகாசபை மாநாட்டில் ஷேக் அப்துல்லா பேச்சு

ஸ்ரீநகர், அக், 18—

‘காஷ்மீர் மக்கள் ஒப்புக் கொள்ளக்கூடிய கட்சி தேசியமகா சபைதான் என்பதை உங்களுடைய செயல்களின் மூலமாகக் காட்டினுல், பிரதமர் இந்திரா காந்தி தன்னுடைய கருத்தை மாற்றிக் கொள்வார்’’என ஜம்மு—காஷ்மீர் முதலமைச்சர் ஷேக் அப்துல்லா தனது கட்சியான ‘தேசியமகாசபை’யின்ஊழியர் கூட்டத்தில் பேசுகையில் கூறினுர்.

மேலும், உலகத்தில் நிரந்தரமானது எதுவும் இல்லை. காஷ்மீரில் காங்கிரஸ் நீடிக்கும் என்று பிரதமர் கொண்டுள்ள முடிவை மாற்றுவது அவரைப் பொறுத்ததல்ல. காங்கிரசுக்காரர்களுடைய நடவடிக்கைகளைப் பொறுத்தேஇருக்கிறது என்றும் குறிப்பிட்டார்.

### வேறுபட்ட பாதையில் சென்ருல் அபாயம்

தேசிய மகாசபைக்கும் காங்கிரசுக்கும் முரண்பாடுகள் ஏற்படும் சாத்தியம் உள்ளது. அதனைத் தவிர்க்கவே விரும்புகிருேம் என்று குறிப்பிட்டஷேக்அப்துல்லா நீங்கள் [தேசிய மகாசபை ஊழியர்கள்] சிலரைக் கட்டுப்படுத்தலாம் ஆனுல்எல்லோரையும் குறிப்பாக இளைஞர்களை கட்டுப்படுத்த முடியாது என்பதையும் குறிப்பிட்டார்.

மேலும், காஷ்மீரில் தேசிய மகாசபையும் காங்கிரசும் ஒரே கொள்கைகளை கடைப்பிடித்தால்— ஒரே குறிக் கோளுக்காக செயல்பட்டால்— இரண்டு கட்சிகளும்இணையலாம்ஒரே கோஷத்தின் கீழ் வேலை செய்யலாம். ஆனுல் அவர்கள் (காங்கிரசுக்காரர்கள்) தனியாக செயல்பட்டால்- வேறுபட்ட பாதையில் சென்ருல்—அது அபாயகரமான போக்கு எனச்சுட்டிக் காட்டினுர்.

இது சம்பந்தமான தன்னுடைய ஆலோசனைக்கு பிரதமர் சாதகமாக இல்லை என்றும் காங்கிரஸ் காஷ்மீர் மாநிலத்தில் இருக்கும் என்று முடிவுசெய்துள்ளார் என்றும் ஷேக் தெரிவித்தார்,

### இந்திரா கூட்டாளி பற்றி காஷ்மீர் மக்களுக்கு எச்சரிக்கை

மேலும் இந்த மாநிலத்தில் தன்னுடைய கூட்டாளிகளை தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமை பிரதமருக்கு உண்டு. அதில் நான் தலையிட முடியாது. ஆனுல் பிரதமர் தேர்ந்தெடுக்கும் கூட்டாளிகளை ஒப்பு கொள்ளவோ. நிராகரிக்கவோ இம் மாநில மக்களுக்கு உரிமை உண்டு. அவர் தனது கூட்டாளிகளாக தேர்ந்தெடுக்கும் நபர்களைப் பற்றி காஷ்மீர் மக்கள்எச்சரிக்கையாக இருக்க வேண்டும். எந்தவொரு தலைவரையும் திணிப்பதை காஷ்மீர் மக்கள் பொறுத்துக் கொள்ளக்கூடாது என்றும் சேக் வற்புறுத்திஞர்.

மேலும், தேசிய மகாசபைதான் காஷ்மீர் மாநில மக்களுக்கு சிறந்ததாக விளங்க முடியும் என தான் நம்புவதாகவும் அவர் கூறினுர்,

## போராடும் பாரி மிட்டாய் தொழிலாளர் உதவி நிதி

ஆட்குறைப்பு,
லே-ஆப் ஆகிய
இரண்டையும் எதிர்த்து
கடந்த 4 மாத காலமாக
போராடிவரும்
நெல்லிக்குப்பம் பாரி
மிட்டாய்த்
தொழிலாளர்களுக்கு
சகோதர ஆதரவைத்
தெரிவிக்கும் பொருட்டு
இன்றே

**நிதி அனுப்புவீர்!**

**நிதி அனுப்ப வேண்டிய முகவரி**

சி. கோவிந்தராஜன்.
1. ஸ்கூல் தெரு,
நெல்லிக்குப்பம்.

### கோவில்பட்டி மின் ஊழியர் ரூ. 10

தமிழ்நாடு மின் குழு ஊழியர் சங்கத்தின் [சி ஐ டி யூ] கோவில்பட்டி கிளை சார்பில் ரூ. 10 அனுப்பப்பட்டது.

### திருச்சி போக்குவரத்து தொழிலாளர் ரூ. 10

அரசாங்கப் போக்குவரத்து ஊழியர்கள் சங்கத்தின் (சிஐடியூ] திருச்சி கிளை சார்பில் ரூ. 10 அனுப்பப்பட்டுள்ளது.

## ‘மிசா’ சட்டத்திற்கு மூன்ருவது திருத்த அவசர சட்டம்

புதுடெல்லி, அக். 17—

‘மிசா’ சட்டத்தின்கீழ் கைது செய்து காவலில் வைத்தால் அதற்கான காரணங்களை தெரிவிப்பதற்கோ இக்காரணங்கள் பற்றிய ஆதாரங்களின் நகல்கள் அளிக்கவோ கூடாது என ‘மிஸா’வுக்கு 3வதுதிருத்தம் கொண்டு வருவதற்கான அவசரசட்டமொன்றை இந்திய ஜனுதிபதி இன்று பிறப்பித்துள்ளார்.

காவலில் வைப்பதற்கான காரணங்கள் ஆதாரங்கள், தகவல்கள் ரகசியமானவைகளாகவும் அரசுக்குச் சம்பந்தப்பட்டவையாகவும் கொள்ள வேண்டுமெனவும் இப்புதிய அவசரச் சட்டம் கூறுகிறது.

இந்த அவசரச் சட்டம் இன்று கூடிய மத்திய அமைச்சரவையின்கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது.

‘மிஸா’ சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டது சம்பந்தமாக கோர்ட்களில் தொடரப்படும் வழக்குகளில், கைது செய்ததற்கான காரணங்களை கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டவருக்கு தெரிவிக்காவிட்டாலும் கோர்ட்டுக்குத்தெரிவிக்க வேண்டுமென அரசாங்கத்துக்கு உத்திரவிட்டதைத் தொடர்ந்தே இந்த அவசரச் சட்டம் பிறப்பிக்கப்பட்டுள்ளது.

மேலும் மிசா சட்டத்திற்கான 3-வது திருத்த அவசரச் சட்டத்தின்படி, ‘மிசா’ சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டதற்கான காரணங்களையோ, அடிப்படை விபரங்களையோ சம்பந்தப்பட்ட ஆதாரங்கள் குறித்தோ காவலில் வைக்கப்பட்ட நபருக்கு தெரிவிக்க வேண்டிய அவசியம் இல்லை என்பதையும் இப்புதிய அவசரச் சட்டம் கூறுகிறது.

மிசா சட்டத்தில் இப்புதிய 3-வது திருத்த அவசரச் சட்டத்தின்படி மூலச் சட்டமான, 16 ஏ. விதியில் சில மாறுதல்கள் செய்வதுடன் புதிதாக இவ்விதிகளை ச் சேர்க்கவும் இந்த அவசரச் சட்டம் வழிவகுத்து இருக்கிறது.

## ஸ்பெயின் சஹாரா உலக நீதிமன்ற கருத்து

தெகாக், அக். 17—

வடமேற்கு ஆப்ரிக்க நாடான ஸ்பெயின் சஹாராவின் மீது ஒரு நூற்றுண்டுக்கு முன்பு ஸ்பெயினின் காலனி ஆதிக்கம் ஏற்பட்டது. ஸ்பெயின் சஹாராவின் மேற்குபகுதியில் மொரக்காவும் மௌரிட்டானியாவும் சில சட்டப்பூர்வ உறவுகள் வைத்திருந்தன. ஆனுல் அதற்கான அத்தாட்சிகளை அவ்விரண்டு நாடுகளும் அளிக்க முடியாது என உலக நீதி மன்றம் தெரிவித்துள்ளது.

மேலும், ஸ்பெயின் சஹாராவானது ஸ்பெயின் ஆதிக்கத்திலிருந்து விடுவிக்கப்பட்டு அந்நாடு சுய நிர்ணய உரிமையை அடைய வேண்டும் என்ற ஐ நா வின் தீர்மானத்திற்கெதிராக உலக நீதி மன்றத்தின் நிலை பாதகமாக இருக்காது என்றும் உலக மன்றத்தின் தலைவர் கூறினுர்.

## சம வேலைக்கு சம ஊதியம்

இக் கோரிக்கை

தமிழக ஜனநாயக மாதர் சங்கம்

இதுகாறும் வலியுறுத்திவந்த கோரிக்கையாகும்,

சட்ட உருவில் வந்துள்ளது- இது போதாது

சம்பள உருவில் வரவேண்டும்

தோட்டத் தொழிலாளிப் பெண்களுக்கு

அக். 15ஆம் நாள் முதல்

அமுலாகும் விதி பிறந்துள்ளது—உடன்

அதற்கான வழி பிறக்க வேண்டும்

விவசாயத்தில்தான் அதிகமான பெண்கள்—ஆனுல்

அவர்களுக்கு சம ஊதியம் இல்லை

நியாயமான ஊதியமும் கூட கிடையாது

எனவே—

விவசாயத் தொழிலாளர் பெண்களுக்கும்

சமஊதியம் கிடைப்பதற்கான

உடனடி உத்திரவு பிறப்பிக்க வேண்டும்

அதை கறாராக அமுலாக்க

உரிய நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டும்

அதற்காக அமைக்கப்படும் கமிட்டிகளில்

மாதர் சங்கத்துக்கு பிரதிநிதித்துவம் வேண்டும்

சமஊதியம் தராது மீறுகின்ற

நிலப்பிரபுக்களை—முதலாளிகளை

சிறைக் கொட்டடிக்குள் தள்ளவேண்டும்

இதற்காகத்தான்—

தமிழக ஜனநாயக மாதர்சங்கம்

அக். 24முதல் 31முடிய நடத்துகின்றது—

### ஒரு இலட்சம் மாதர் கையெழுத்து இயக்கம்!

மாதர் குலமே
உயரிய கோரிக்கைக்கான
இந்த இயக்கம் வெற்றிபெற
இல்லங்கள் தோறும் செல்வீர்!
கையெழுத்துக்கள் சேகரிப்பீர்!

### மலைத் தோட்டங்களில் பணி புரியும்
## பெண்களுக்கு சம ஊதியம்
### 15-ந் தேதி முதல் அமுல்

புதுடெல்லி, அக். 16—

ரப்பர், தேயிலை, காப்பி மற்றும் வாசனைத் திரவியங்கள் விளையும் மலைத் தோட்டங்களில் பணி புரியும் பெண்களுக்கு, ஆண் தொழிலாளர்களுக்குச் சமமான ஊதியம் கொடுக்கப் படுகிறதுஎன்றும்இது கடந்த 15ந் தேதி முதல் அமுலாகிறது என்றும் அறிவிக்கப் படுகிறது.

சம வேலைக்கு சம ஊதியம் என்ற அவசரச் சட்டத்தின்கீழ் முதன் முதலாக இந்த நடவடிக்கை எடுக்கப் படுகிறது.

ஒரே வேலையில் பணி புரியும் பெண் தொழிலாளர்கள், ஆண் தொழிலாளர்களைவிட குறைவாகக் கூலி பெற்று வருகின்றனர். தோட்டக் காடுகளிலும், விவசாயத்திலும், ஏனைய பல துறைகளிலும் இந்த அநியாயம் தொடர்ந்து இருந்து வருகிறது.

இக்கொடுமைக்கு முடிவு கட்டவேண்டும் என்று ஜனநாயக மாதர் சங்கமும், சி ஐ டி யூ வும் தொடர்ந்து வற்புறுத்தி வந்தன. இது சம்பந்தமாக சர்வதேச தொழிலாளர் அமைப்புக்கு (ஐ எல் ஓ) சி ஐ டி யூ கடிதம் எழுதியது. அதன் பின்பு இந்திய அரசாங்கத்துக்கு ஐ எல் ஓ தாக்கீது கொடுத்ததின் பேரில், சம வேலைக்கு சம ஊதியம் வழங்க வேண்டும் என்ற அவசரச் சட்டத்தை இந்த அவசரநிலை காலத்தில் கொண்டு வந்தது. அதன் முதல்படியாக இப்போது தோட்டங்களில் அம்முறை அமுலாக்கப்படுகிறது என்று அறிவிக்கப்படுகிறது.

நாள்தோறும் ஆண் தொழிலாளர்களை விட பெண் தொழிலாளர்கள்— இமாசலப் பிரதேசத்தில் ஒரு ரூபாயும், கர்நாடகத்தில் 60 காசும், தமிழகத்தில் 56 காசும், கேரளத்தில் 40 காசும், மேற்குவங்கத்தில் 17காசும், அசாமில் 18காசும், திரிபுராவில் 19 காசும் குறைவாகப் பெற்று வந்தனர், இனிமேல் இந்த வித்தியாசம் இருக்காது.

இதே போல் மற்ற தொழில்களுக்கும் ‘‘சம வேலைக்கு சம ஊதியம்’’ முறை விரைவில் அமுலாக்கப்படுமா என்பது போகப் போகத்தான் தெரியும்.

## பீகார் வெள்ள நிவாரண நிதி

பீகார் மாநிலத்தில
அண்மையில் ஏற்பட்ட
பயங்கர வெள்ளப் பெருக்கு
— அதன் விளைவாக
உயிர்ப் பலி
உடைமைச் சேதம்
சொல்லொண்ணு துயரம்
—இவற்றிற்கு ஆட்பட்டு
துயருறும்
பீகார் மாநில மக்களுக்காக
சிஐடியூ திரட்டிவரும்
நிவாரண நிதிக்கு
உங்கள் பங்கைச்
செலுத்தி விட்டீரா?
இல்லையென்றேல்
உடனே அனுப்புவீர்!

**நிதி அனுப்ப வேண்டிய முகவரி:**

com. RAS BEHARI SINGH
ADVOCATE,
CONVENOR,
BIHAR PEOPLE'S RELIEF COMMITTEE
BAILEY ROAD
PATNA
BIHAR STATE

### கோவில்பட்டி மின் ஊழியர் ரூ. 10

தமிழ்நாடு மின் குழு ஊழியர் சங்கத்தின் (சி ஐ டி யூ) கோவில்பட்டி கிளை சார்பில் ரூ. 10 அனுப்பப்பட்டது.

### திருச்சி போக்குவரத்து தொழிலாளர் ரூ. 15

அரசாங்கப் போக்குவரத்து ஊழியர்கள் சங்கத்தின் (சிஐடியூ) திருச்சி கிளை சார்பில ரூ. 15 அனுப்பப்பட்டுள்ளது.

# தீக்கதிர்

## அமைச்சர் சுக்லா யாருக்குவாதாடுகிறார்?

மத்திய அரசின் தகவல் — விளம்பர — ஒலி பரப்பு இலாகா அமைச்சரான திரு வி சி சுக்லா அக். 14ம் நாள் ஹைதராபாத்தில் ஒரு திறப்பு விழாவில் பேசும் போது "டெலிவிஷன் செட்டுகள் மீது போடப்பட்டுள்ள அதிகமான (எக்சைஸ்) சுங்கவரியை அகற்றிவிட வேண்டும். இதனால் இன்னும் அனேகர் "டெலிவிஷன்" செட்டுகளை வாங்குவார்கள். இத்தகைய ஆலோசனை ஒன்று தகவல்—விளம்பர—ஒலிபரப்பு இலாகா அமைச்சகத்தின் பரிசீலனையில் இருக்கிறது. ரேடியோவும், டெலிவிஷனும் பிரதானமாக பொதுமக்களுக்கே தேவை. அவற்றின் மூலம் பொதுஜனங்களுக்குப் பயிற்சியும், மகிழ்ச்சி யளிக்கும் பொழுதுபோக்குக் காட்சிகளும் அளிக்க முடியும். சாதாரண மக்கள் வாங்க முடியாத அளவுக்கு இவற்றின் விலை இருக்கலாமா?" என்று கூறியிருக்கிறார்.

இப்போது ஒரு டெலிவிஷன் பெட்டியின் விலை சுமார் ரூ 4000க்திலிருந்து ரூ 4500 வரை இருக்கிறதென்று அறிகிறோம். இதிலுள்ள எக்சைஸ் வரி 35 சதவிகிதம்; விற்பனை வரி மேலுமொரு 15 சதவிகிதம். இந்தஇரண்டு வரிகளையுமே நீக்கிவிட்டாலும்கூட ஒரு "டி. வி." செட்டின் விலை ரூ 2000க்குக் குறையாது. இந்த நாட்டின் ஏழை எளிய மக்கள் இந்த விலையைக் கொடுத்து "டி. வி" செட்டுகளை ஏராளமாக வாங்கித்தள்ளி விடுவார்களென்று திரு.சுக்லா நம்மை நம்பச் சொல்லுகிறாரா?

டெலிவிஷன் செட்டுகள் உற்பத்தி அவசியமென்று மத்திய அரசு முடிவு செய்தபோதும் அதன் மீது எக்சைஸ் வரி போட்ட போதும் நமது நாட்டு மக்களின் நிலைமை எப்படி இருக்கிறது என்று அரசினருக்குத் தெரியாதா? அப்போது நல்ல மார்க்கெட்டிருக்குமென்று கணக்குப் போட்டு உற்பத்தி செய்ய முன்வந்த பல முதலாளிகளுக்கு மத்திய அரசு லைசென்சுகளை தாராளமாக வழங்கியது. இங்கு உற்பத்தி யாகும் செட்டுகளின் பல பாகங்கள் வெளிநாட்டிலிருந்து இறக்குமதியாக வேண்டியுள்ளன. அவற்றையும் அரசு செய்து கொடுத்தது. கணிசமான லாபத்துடன் செட்டுகளின் விற்பனை ஆரம்பித்தது. உற்பத்தி செய்த முதலாளிகள் மன மகிழ்ந்தார்கள்.

ஆனால் சீக்கிரத்திலேயே "டிமாண்ட்" குறைய ஆரம்பித்தது. உற்பத்தியாளர்களுக்குள் போட்டி அதிகரித்தது. நாளது வரை 58கோடிக்குமேல் மக்கள்உள்ள நம் நாட்டில் 2 லட்சம் "டி. வி." செட்டுகள்கூட விற்பனையாகவில்லையாம். சர்க்கார் விதித்துள்ள எக்சைஸ் வரியைக் குறைத்தால் அதனால் சில செட்டுகள் மேலும் விற்பனையாகுமென்று மத்திய அரசை 'டெலிவிஷன்' உற்பத்தியாளர்கள் நெருக்குகிறார்கள். திரு. சுக்லா இதற்கு அரசினர் சார்பாக இசைவு தெரிவிக்கிறார். இதுதான் விஷயம்.

சாதாரணமக்களுக்கு எட்டாக்கனியாயிருக்கக்கூடிய, பெரும்பாலான மக்களின் பொருளாதார வசதிகளை அளவுகோலாகவைத்துப்பார்த்தால் 'ஆடம்பரப்பொருட்கள்" என்ற பட்டியலில் முதலிடம் பெறவேண்டிய "டெலிவிஷன்" விஷயத்தில்—அதை உற்பத்தி செய்யும் முதலாளிகளுக்கும் அதை வாங்கும் சக்தி இருக்கக்கூடிய வசதியுள்ள சிறு கூட்டத்துக்கும் மட்டும்தான் பலனளிக்கக் கூடிய ஒரு விஷயத்தில் திரு சுக்லாவுக்கு இருக்கக்கூடிய கனிவுதான் என்னே?

சாதாரண மக்கள் உபயோகிக்கும்எண்ணற்ற இதர பொருட்களின் மீதுள்ள எக்சைஸ் வரியை மத்திய அரசு இவ்வாறு குறைக்க முன்வருமா? ஏழைஎளிய மக்கள் உபயோகிக்கும் பொருட்களை எடுத்துக்கொண்டால் கூட அவர்களது வருடாந்திரச்செலவில் 6 சதவிகிதத்திலிருந்து 10 சத விகிதத்துக்குக்குறையாமல் சுங்கவரியாக உள்ளது.

துணியின் மீதுள்ள அநியாயமான எக்சைஸ் வரி, மண்ணெண்ணை மீதுள்ள எக்சைஸ்வரி, சுமார் ஒன்றரை காசு விலைபெறும் தீப்பெட்டிக்கு மேலும் சுமார் நாலரை காசு வரை போடப்படும் எக்சைஸ்வரி, இதுபோன்று, கோடானுகோடிமக்களுக்கு அன்றாடத்தேவைகளாகஉள்ள அத்தியாவசியப்பொருட்களின் எக்சைஸ்வரிநீக்கப்படுமென்றால் அர்த்தமுண்டு. இங்கு அமைச்சரின் கவனத்திற்கு வந்துள்ளது அத்தகைய மக்களல்ல. என்னதான் அவர்கள் மக்களுக்கு பரிவு காட்டிதான் டி. வி. செட்டுகளின் எக்சைஸ் வரியைக் குறைக்கிறேன்னு சொன்னாலும் மக்களின் பரிதாபகரமான நிலைமையை அவர் கேலிக்கு ஆளாக்குகிறார் என்றுதான் அர்த்தம்.

மத்திய அரசின் கொள்கைகள் யாருடைய நலனுக்காகச் செயல்படுகின்றன என்று திரு சுக்லா அவர்களின் பேச்சு நன்கு எடுத்துக் காட்டுகிறது.

ஒரு பானைச் சோற்றிற்கு ஒரு அரிசி பதம்.

## மேட்டூர் ஸ்பின்னிங் மில்லில் ௯ தொழிலாளர்கள் வேலைநீக்கம்

### இன்றைய அரசியல் சூழ்நிலையை பயன்படுத்தி நிர்வாகம் நடவடிக்கை

மேட்டூர்அணை, அக், 18—

இங்குள்ள மேட்டூர் ஸ்பின்னிங் மில்லில் கடந்த 17ந்தேதி முதல் தொழிலாளர்கள் காலவரையற்ற வேலை நிறுத்தத்தில் இறங்கியுள்ளனர்.

ஏழு தொழிலாளர்கள் வேலைநீக்கம் செய்யப்பட்டதற்குஆட்சேபம்தெரிவித்தே தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்ய வேண்டிய கட்டாயத்திற்குத் தள்ளப்பட்டுள்ளார்கள்.

'ஸ்பின்னிங் சைட்'ராக பணியாற்றும தொழிலாளர்கள் அந்த செக்சனில் வேலை இல்லாதபோது ரீலிங் செக்சனுக்கு வேலைக்குச் செல்ல வேண்டும் என்று ஏற்கனவே தொழிற்சங்கத்திற்கும் நிர்வாகத்திற்கும் ஒப்பந்தம் ஆகியுள்ளது இந்த ஒப்பந்தப்படி நிரந்தரமாக வேலை செய்யும் இடத்தில் குறித்த அளவுஎஃபிசென்ஸ் கோட்டா எடுக்கவேண்டும். அதே தொழிலாளர்கள் ரீலிங் செக்சனுக்கு மாதத்திற்கு மூன்று அல்லது நான்கு நாட்கள்தான் செல்வார்கள்; அவ்வாறு தற்காலிகமாக வேலை செய்யும் இடத்திலும் குறித்த அளவு கோட்டா எடுக்க வேண்டும் என்று ஒப்பந்தத்தில் இல்லை. இதன்படிதான் 1970 ஆம் ஆண்டு முதல் இதுவரை— ஐந்து ஆண்டுகள் நடைமுறையும் கூட ஆனால் நிர்வாகம்— இன்று நாட்டில அரசியல் சூழ்நிலையைப் பயன்படுத்தி தொழிலாளிகளை மேலும சுரண்டப்பார்க்கிறதாம். அதாவது திடீரென்று, தற்காலிகமாக வேலைசெய்யும் பகுதியில் கோட்டா எடுக்கவில்லை என்று கூறி 4 தொழிலாளர்களை நிர்வாகம் 4நாட்களுக்கு சஸ்பெண்ட் செய்து விடடது. இது சம்பந்தமாக லேபர் ஆபீசர் முன்புபேச்சு வார்த்தை நடந்து கொண்டிருந்தபோதே கடந்த 15-ந் தேதி அந்த 9 தொழிலாளர்களையும் எதேச்சாதிகாரமாக வேலை நீக்கமும் செய்து விட்டது.

இது சம்பந்தமாக லேபர் ஆபீசர், உதவி லேபர் கமிஷனர்வரை பேச்சு வார்த்தை நடத்தி ஏழு தொழிலாளர்களை வேலைக்கு எடுக்க நிர்வாகம் மறுக்கவே வேறு வழியின்றி தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்து வருகிறார்கள்,

## 'மிசா'வில் கைதாகி சிறைக் காவலில் இருந்த சிஐடியூ தலைவர் பாரதியா மரணம் குறித்து

# நீதி விசாரணை செய்க

## ம. பி. முதலமைச்சர் சேத்திக்கு ஜோதிபாசு கடிதம்

கல்கத்தா, அக். 18—

'மிசா'வில் கைதாகி சிறையில் வைக்கப்பட்டிருந்த மத்தியப்பிரதேச சி ஐ டி யூ தலைவர்தோழர் பைரவ் பாரதியா அவர்கள் சிறையில் மரணம் அடைந்தது குறித்து நீதி விசாரணை செய்ய வேண்டும் என்று வற்புறுத்தி சி ஐ டி யூ துணைத் தலைவர் தோழர் ஜோதிபாசு கடந்த 13-ந் தேதி யன்று மத்தியப்பிரதேச முதலமைச்சர் திரு. பி. சி. சேத்திக்கு கடிதம் எழுதியுள்ளார்- அக்கடிதம் வருமாறு:—



மதிப்புமிக்கவரும், நாக்தா பகுதியில் மிகவும் பிரபலமான சி ஐ டி யூ தலைவருமான திரு பைரவ் பாரதியா, காவலில் இருக்கும் போதே, இந்தூர் மருத்துவ மனையில் 1975 செப்டம்பர் 18ம் நாள் காலமானார்என்ற துயரமான செய்தி கேட்டு நான் மிகவும் அதிர்ச்சி அடைந்தேன்.

திரு பாரதியா, ஜூன் 26ம் நாளன்றே மிசா சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டார். எங்களுக்கு கிடைத்த தகவல்களிலிருந்து, அவர் நல்ல ஆரோக்கியத்துடன் இல்லை என்பது தெரிந்தது. மேலும் சிறையில் இருக்கும்போது அவருக்கு தேவையான மருத்துவ வசதிகள் செய்து கொடுக்கப்படவில்லை என்றும் அறிகிறோம். கடைசி நாட்களில் கூட அவரது உடல் நிலையை கவனித்துக் கொள்ள ஓர் உதவியாளரை வைத்துக்கொள்வதற்கோ அல்லது அவர் குடும்பத்தினரைச் சந்திப்பதற்கோ அவர் அனுமதிக்கப்படவில்லை.

### அரசியல் குரோதத்துடன் எடுக்கப்பட்ட நடவடிக்கையா?

அவர் உடல் நலம் குன்றி பயங்கரமான வலியுடன் பல நாட்கள், படுத்த படுக்கையாக இருந்துள்ளார். இப்படியிருந்த போதிலும்உரிய காலத்தில்தேவையான மருத்துவ வசதிகள் கவனத்துடன் அவருக்கு அளிக்கப்படவில்லை.

இத்தகைய சூழ்நிலை உள்ள ஒருவர் தன்னை கவனித்துக் கொள்ள உதவியாளரை வைத்துக் கொள்வதோ, அல்லது குடும்பத்தினரைச் சந்திப்பதோ எப்படி நாட்டின் பந்தோபஸ்திற்கு பாதிப் பேற்படுத்தும் என்பது எனக்கு வியப்பாகவே உள்ளது. இவை உழைப்பாளி மக்களின் நலனில் அக்கறை கொண்ட ஒரு முதிர்ந்த தொழிற்சங்கத் தலைவர் மீது,அரசியல்குரோதத்துடன் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் என்றே சி ஐ டி யூ கருதுகிறது.

### பாரபட்சமற்ற நீதிவிசாரணை வேண்டும்

திரு பைரவ்பாரதியாஇதற்கு முன்பாக நாக்தா தொகுதியிலிருந்துமத்தியபிரதேசசட்டமன்றத்துக்கு தேர்தெடுக்கப்பட்டவர்என்பதையும்1932-ம் ஆண்டிலிருந்தே நீண்ட காலமாக தொடர்ந்து சமூக சேவைசெய்துவந்திருப்பவர் என்பதையும் ஒரு வேளை நீங்கள் தெரிந்திருக்கலாம். விசாரணை எதுவுமின்றி காவல் கைதியாக சிறையில் வைக்கப்பட்டுள்ள இத்தகைய ஒருவருக்கு அளிக்கப்பட்ட வசதிகள் பற்றியோ, அவர் அடைந்துள்ள துயரங்கள் குறித்தோ வர்ணிக்க வார்த்தைகள் இல்லை.

எனவே காவல் கைதியாக இருந்த திரு பைரவ் பாரதியாவின் மரணம் குறித்து உடனடியாக ஒரு பாரபட்சமற்ற நீதி விசாரணை நடத்தப்பட வேண்டும் என சி ஐ டி யூ கோருகிறது இந்த விசாரணையின மூலம் வெளியாகும் உண்மைக்குப்பிறகாவது, சிறைக் கைதிகளுக்கு இழைக்கப்படும் கொடுமைகள் தடுககப்பட நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

மேலும் மால்வாபிராந்தியத்தில் உள்ள பல தொழிற் சங்கங்களும் இத்தகைய தொரு நீதி விசாரணைவேண்டுமென்று கோரியுள்ளன எனவும் நான் அறிகிறேன். இது குறித்து நீங்கள் என்ன நடவடிக்கை மேற்கொள்ளவிருக்கிறீர்கள் என்பதை எனக்குத்தெரிவித்தால் நான் நன்றியுடையவனாக இருப்பேன்.

இவ்வாறு அக் கடிதத்தில் தோழர் ஜோதிபாசு குறிப்பிட்டுள்ளார்.

## ஸ்தல ஸ்தாபன தொழிலாளர்கள்

# கோரிக்கை நாள்

### வேலை நிரந்தரம் - சம்பள உயர்வு கோரி பல்லாயிரம் தொழிலாளர்கள் பங்கேற்பு

மதுரை, அக் 18—

தமிழகம் முழுவதும் உள்ள மாநகராட்சி, நகராட்சி, பேரூராட்சி, ஊராட்சி, நகரியம் ஆகிய ஸ்தல ஸ்தாபனங்களில்பணிபுரியும் பல்லாயிரம் தொழிலாளர்கள் கடந்த 15ந் தேதியன்று "கோரிக்கை நாள்" அனுஷ்டித்தனர்.

கடந்த 25ந் தேதி பன்று திருச்சி மாநகரில் நடந்த தமிழக ஸ்தல ஸ்தாபனத் தொழிலாளர் பிரதிநிதிகளின் கூட்டத்தில் விடுக்கப்பட்ட அறைகூவலுககு இணங்க இந்த கோரிக்கை நாள் மாநிலம் முழுவதும் அனுஷ்டிக்கப்பட்டது.

அன்று ஆர்ப்பாட்டங்கள் நடத்தி கோரிக்கை மகஜர்கள் ஸ்தல அதிகாரிகளிடம் சமர்ப்பிக்கப்பட்டன. பொதுக்கூட்டங்களும் நடத்தப்பட்டன.

### கோரிக்கைகள்

சுகாதார சாலை பராமரிப்பு, மலேரியா போன்ற என் எம் ஆர் சிப்பந்திகள் அனைவரையும் நிரந்தரப்பிரிவில் கொண்டு வந்து, தமிழக அரசின் நாலாந்திரப் பிரிவு சிப்பந்திகளுக்கு வழங்கப்பட்டு வரும் சகல உரிமைகளையும் வழங்க வேண்டும் என்றும—அடிப்படைச் சம்பளமாக ரூ 175ம், ஆண்டு சம்பள உயர்வாக ரூ 8ம் வழங்க வேண்டும் என்றும்,

சென்னை வாழ்க்கைச் செலவு புள்ளி 1400க்கு ரூ75 நிரந்தரப் பஞ்சப்படியாகக் கொண்டு அதற்குமேல் உள்ள ஒவ்வொரு புள்ளிக்கும் 25 காசு வீதம் பஞ்சப்படி நிர்ணயிக்க வேண்டும் என்றும், அரசு ஊழியர்களுக்குத் தர வேண்டிய 5 தவணை அகவிலைப்படியையும் சேர்த்துத்தரவேண்டும் என்றும் வற்புறுத்தி இக் கோரிக்கை தினம் அனுஷ்டிக்கப்பட்டது.

மற்றும் சுகாதார அலவன்ஸ் ரூ 25, நகர ஈட்டுப் படி ரூ 25, வீட்டு வாடகைப்படியை ரூ. 25 - ஆக உயர்த்துதல், குடியிருப்பு [காலனி] வீடுகளைச் சொந்தமாக்குதல், 8. 33 சதவீதம் குறைந்தபட்ச போனஸ், கடன வசதி, பிராவிடண்ட் பண்டு—கிராஜுட்டி — இன்சூரன்ஸ் வசதிகள், இறந்து போன தொழிலாளியின் குடும்பத்துக்கு ரூ 10 ஆயிரம் தாமதமின்றி வழங்குதல் 10 ஆண்டுகாலசர்வீஸ் ஆன தொழிலாளர்களுக்கு பென்சன் திட்டம்,240நாட்கள் சர்வீசான என். எம். ஆர். தொழிலாளர்களை நிரந்தரமாககுதல், சுகாதார சிப்பந்தி வேலைக்கு ஆள்எடுக்குமபோது வேலைதேடித்தரும் ஸ்தாபனத்தின் மூலம்தான் வரவேண்டும் என்ற அரசு உத்தரவை ரத்துச் செய்தல் —ஆகிய நியாயமான அத்தியாவசியமான கோரிக்கைகள் வற்புறுத்தப்பட்டன.

### மதுரையில்

அன்று காலை தோழர்கள் கே. வாசுதேவன், வி. வீரபத்திரன், டி கே முரளிதான் ஆகியோர்மாநகராட்சி ஆணையாளரைச் சந்தித்து கோரிக்கை மகஜரைச் சமர்ப்பித்து கோரிக்கைகளை நிறைவேற்றக் கோரினர்.

மாலையில், கரும்பாலை மாநகராட்சிக் காலனியில் தோழர் ஓவல் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது. தோழர்கள் கே வாசுதேவன், வி வீரபத்திரன், டி கே முரளிதரன் மற்றும் பலர் பேசினர். இறுதியில் தியாகி ராமசாமி குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சி நடந்தது.

### பெரியகுளம்

இங்கு நகராட்சி முன்பு எல்லாப் பெண் தொழிலாளர்கள் உள்பட அனைவரும் கோரிக்கை முழக்கங்களை எழுப்பி ஆர்ப்பாட்டம் செய்த பின்பு தோழர்கள் ஆர் சுப்பையா, எஸ் ஏ ரஜாக், எஸ் ஜெகநாதன், பி அப்துல்ரகுமான், ஆர் அழகர் ஆகியோர் கோரிக்கை மகஜர்களை நகரசபைத் தலைவர், துணைத்தலைவர், சுகாதார அதிகாரி ஆகியோரிடம் சமர்ப்பித்தனர்.

கோரிக்கைகள் அனைத்தும் நியாயமானது என்று கூறிய நகரசபைத் தலைவர், மகஜரை அமைச்சருக்கு அனுப்பி வைப்பதாகக் கூறினார்.

அதன்பின், தோழர் ஆர் சுப்பையா தலைமையில் நடந்த பேரவைக்கூட்டத்தில் ஆர் அழகர், எஸ் ஏ ரஜாக், பி அப்துல் ரகுமான் ஆகியோர் பேசினர்.

### சேலத்தில்

இங்கு சேலம் முனிசிபல் லேபர் யூனியன் சார்பில் தோழர்கள் பி கிருஷ்ணன், மேட்டூர் கந்தசாமி, குப்பன், கண்ணன், சடையன் ஆகியோர் தலைமையில் சுமார் 100 தொழிலாளர்கள் நகராட்சி ஆணையாளரைச் சந்தித்து கோரிக்கை மகஜர் அளித்தனர்.

தன்னால் இயன்ற கோரிக்கைகளைக் கவனிபபதாக ஆணையாளர் கூறினார்.

## விழுப்புரம் ஆணையாளர் போக்கு: கண்டன ஆர்ப்பாட்டம்

விழுப்புரத்தில் பெருவாரியான பெண் தொழிலாளர் உட்படஏராளமான தொழிலாளர்கள் தோழர்கள்எஸ் பத்மநாபன், ஆர் ராமச்சந்திரன் ஆகியோர் தலைமையில்நகராட்சி அலுவலக முன் கூடி கோரிக்கை முழக்கங்கள் எழுப்பி ஆர்ப்பாட்டம் செய்தனர். பின்னர், தோழர்கள் எஸ் பத்மநாபன், ஆர் ராமச்சந்திரன், எஸ் அர்ச்சுணன் ஏ தேவராஜ் ஆகியோர் ஆணையாளரையும், சுகாதார அதிகாரியையும் சந்தித்து கோரிக்கை மகஜர்களை அளித்தனர். மகஜரை வாங்கிப் பிரிதது கூடப் பார்க்காமல் 'சரி போய் வாருங்கள்' என்று கூறினாராம். ஆனால் தொழிலாளர் தலைவர்கள், கோரிக்கைகள் குறித்து விவாதிக்கவேண்டும் என்று கோரியபோதிலும் ஆணையாளர் ஆணவத்துடன் மறுத்து விட்டாராம்.

இந்நகராட்சியில் சர்வீஸ் ரிஜிஸ்டர் பதிவு செய்வதில்லையாம். இதனால், ஆண்டுச் சம்பளம் கிடைப்பது கிடையாது. மற்ற நகராட்சிகளில் வழங்கப்படுவது போல — காலணி, சோப்பு முதலியனவும்வழங்கப்படுவதில்லையாம் தீபாவளி அட்வான்ஸ் ரூ 200 கோரியதற்கு ரூ150-க்கு மேல் தரமறுக்கப் படுகிறதாம். மற்றவர்களுக்குசைக்கிள் அட்வான்ஸ் கொடுத்திருக்கும் போது, சுகாதார ஊழியர்களுக்கு மட்டும் மறுக்கப்படுகிறதாம்.

தவிர, முனிசிபல் பார்க்கில் சங்கக் கூட்டங்கள் நடத்தக்கூடாது என்றும் கெடுபிடி செய்தாராம்.

பின்னர் நடந்த தொழிலாளர்கள் கூட்டத்தில் நிலைமையை விளக்கியபின் அதிகாரிகள் போக்கைக் கண்டித்து ஆர்ப்பாட்டம் செய்தனர் தொழிலாளர்கள்.

## ஜனநாயக பாதுகாப்பு பொதுக்கூட்டம்

மதுரை, அக். 18—

கடந்த 17ந் தேதி மேலப் பொன்னகரம் முக்கிய வீதியில் காஸ்ட்ரோசதுக்கத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் ஜனநாயகப் பாதுகாப்பு பொதுக்கூட்டம் நடந்தது. தோழர் மதன் தலைமை வகித்தார்.

இன்றைய அவசர நிலை குறித்தும் மக்களது கடமைகள் குறித்தும்பொன்மலை வி. பரமேஸ்வரனும், போனஸ் அவசரச்சட்டத்தால்உழைக்கும் மக்களுக்குஏற்படடுள்ள பாதிப்பு பற்றி பஞ்சாலைத் தொழிலாளர்சங்கப்பொதுச் செயலாளர் பி. எம். குமாரும் பேசினர். மற்றும் தோழர்கள் தங்கப்பாண்டியன், ஆர். அழகர், பி.ராஜா ஆகியோர் பேசினர்.

### மத்திய அரசுக்கு வேண்டுகோள்

அவசர நிலையை வாபஸ் பெறக்கோரியும், 'மிசா' போன்ற சட்டங்களின் கீழ் கைது செய்யப்பட்டு காவலில் உள்ள தலைவர்களையும் ஊழியர்களையும் உடன் விடுதலை செய்யக் கோரியும் மத்திய அரசுக்கு வேண்டுகோள் விடப்பட்டது.

### மாநில அரசுக்கு வேண்டுகோள்

தமிழகத்தில் ஊர்வலங்களுக்கு விதிக்கப்பட்டுள்ள தடை உத்திரவுகளை ரத்துச் செய்யக் கோரி மாநில அரசுக்கும் வேண்டுகோள் விடுக்கப்பட்டது.

## நீதி விசாரணை கோரும் தந்திகள்குவியட்டும்!

அன்புள்ள தோழர்களே,

'மிசா'வின் கீழ் ஜூன் 26-ல் கைது செய்யப்பட்டு இந்தூர் மத்திய சிறையில் காவலில் வைக்கப்பட்டிருந்த மத்தியப் பிரதேச சி ஐ டி யூ தலைவரும், முன்னாள் சட்ட மன்ற உறுப்பினருமான தோழர் பைரவ் பாரதியா அவர்கள், கடந்த 18—9—75-ந் தேதி சிறையிலே காலமானார்.

தோழர் பைரவ் பாரதியா அவர்களது மரணம் குறித்து நீதி விசாரணை நடத்தப்பட வேண்டும் எனக்கோரி இந்தியத் தொழிற் சங்க மையத்தின் (சி ஐ டி யூ) துணைத் தலைவர் தோழர் ஜோதிபாசுமத்தியப் பிரதேச மாநில முதலமைச்சருக்கு எழுதியுள்ள கடிதம் இங்கே தனியாகப் பிரசுரிக்கப்பட்டுள்ளது.

சிறைக்காவலில் இருந்தபோது தோழர் பாரதியா நடத்தப்பட்ட விதம் குறித்து ஆட்சேபனைக் கடிதங்களும் அந்த மரணம் குறித்து நீதி விசாரணை செய்யக்கோரி தீர்மானங்களும் தந்திகளும், மத்தியப் பிரதேச முதலமைச்சருக்கு அனுப்ப வேண்டும் என்று சி ஐ டி யூவுடன் இணைக்கப்பட்ட அனைத்துச் சங்கங்களும் கேட்டுக் கொள்ளப்படுகின்றன.

வாழ்த்துக்களுடன்,

தோழமையுள்ள

நிர்சிங்க சக்கரவர்த்தி

செயலாளர்

சி ஐ டி யூ

## ஆஸ்திரேலியாவில் அரசியல் நெருக்கடி

கான்பெர்ரா, அக். 16—

ஆஸ்திரேலியா நாட்டு அமைச்சரவை பெரும் நெருக்கடியில்சிக்கியுள்ளது ஒருபக்கம நாடாளுமன்றத்தில் எதிர்க்கட்சிகளின் நிர்ப்பந்தம். மறுபக்கம் நாடு தழுவிய வேலைநிறுத்தத்திற்கு தொழிற் சங்கங்களின் அறைகூவல்.

1974-ம் ஆண்டு மார்ச் மாதம் நடந்த பொதுத் தேர்தலில் தற்போது ஆட்சியில் இருக்கும் தொழிற் கட்சி, பிரதிநிதித்துவ சபையில் மெஜாரிட்டிபெற்றாலும்,மேல் சபையில் மைனாரிட்டியாக உள்ளது. இதன்பின்புநடைபெற்ற பொதுமக்கள் அபிப்பிராயதேர்தலும்தொழிற்கட்சிக்கு எதிராகவே முடிந்தது.

இந்நிலையில்தான் லிபரல் கட்சி, தேசிய கட்சி ஆகிய எதிர்க்கட்சிகள் மறு தேர்தல் நடத்துமாறு வற்புறுத்துகின்றன. மறு தேர்தலுக்கு ஒப்புக் கொள்ளாவிட்டால் மேல்சபையில் நிதி சப்ளை சம்பந்தமான மசோதாவை தோற்கடிப்போம் என எச்சரித்து தேர்தல் அறிவிப்புக்கான காலக்கெடுவும் விதித்தன.

ஆனால் ஆஸ்திரேலியா பிரதமர் விட்லாமோ காலக்கெடுவை நிராகரித்து விட்டார்.

இதனால் அரசாங்கத்தின் பட்ஜெட் மசோதாவைஎதிர் கட்சியினர் மேல்சபையில் தோற்கடித்தனர். இதன் தொடர்ச்சியாக, ஆஸ்திரேலியாவின் அமைச்சரவைக்கும் அரசியல் சட்டத்திற்கும் பெரும் நெருக்கடி உருவாகி உள்ளது.

அரசாங்கத்தின் பட்ஜெட் மசோதாதோற்கடிக்கபபட்டதால், அரசாங்கத்திற்கு தேவையான பணசப்ளை தாமதப்படுத்தப்பட்டுள்ளது. தொழிற்கட்சி பிரதமர் அடுத்தபொதுத்தேர்தலுக்கு ஒப்புக்கொள்ளுமவரை இத் தாமதம் நீடிக்கும்.

மேலும், ஆஸ்திரேலியாவின் மிகப்பெரிய தொழிற் சங்கத்தினரால் அரசாங்கத்திற்குஎதிராக தேர்தல்நடத்த ஒப்புக்கொள்ளக் கோரி பார்லிமெண்ட்முன்பு பெரும் ஆர்ப்பாட்டம் நடத்தப்பட்டது. மேலும், நாடுதழுவிய வேலை நிறுத்தம் நடததப்படும் எனவும் அச்சங்கத்தின் தலைவர் எச்சரிக்கை விடுத்துள்ளார்.

## தைமூர் தீவில் இந்தோனேஷியா தலையிடவில்லையாம்

ஜாகர்தா, அக். 17—

போர்த்துகல் தைமூரில் உள்ள நிலைமையானது இந்தோனேஷியாவிலும் தென்கிழக்கு ஆசியாவிலும் ஸ்திரத்தன்மையைசீர்குலைக்கும் வகையில் உள்ளதுஎன அறிவித்த இந்தோனேஷிய வெளிநாட்டமைச்சர் [இந்தோனேஷியப் படைகள் தைமூருக்கு செல்லவில்லை என்றும் கூறுகிறார்.

தன்நாட்டை பாதிக்கும் நிகழ்ச்சிகள் ஒரு சின்னஞ் சிறு தீவில் நடக்கிறதாம். உடனடி சுதந்திரத்திற்காக போராடும் தீவிர இயக்கம் உள்ள தீவிற்கு அருகில் ராணுவ சர்வாதிகாரிகளால் ஆளப்படும் இந்தோனேஷியா தைமூரில் தலையிடவில்லையாம்.

ஆனால், முன்னேறிவந்த முற்போக்கு படையினர் தன்கட்டுப்பாட்டில் இருந்த பேலிமோ, மாலியானா ஆகிய நகரங்களையெல்லாம் பிற்போக்கு படைகளிடம் இழந்து வருகின்றன.

இந்தோனேசிய கொடுங்கோலர்கள் ஏற்கெனவே, துருப்புகளையும் ஆயுதங்களையும் பிற்போக்கு சக்தியினருக்கு அனுப்பி உள்ளனர். அப்படைகளின் உதவியுடன்தான் பிரெட்லின் படைகளை பிற்போக்கு படைகள் பின்வாங்கச் செய்துள்ளன.

## ஜப்பானுக்கு ஆதரவாக சோவியத் மீது சீன குற்றச்சாட்டு

ஹாங்காங், அக். 17—

பசிபிக் கடலில் ஜப்பானுக்கு சொந்தமான தீவுகள் நான்கை இரண்டாவது உலகப் போரின் போது சோவியத் யூனியன் கைப்பற்றிக் கொண்டதைதிருப்பி தர மறுக்கிறது என்ற ஜப்பான் குற்றச்சாட்டை சீன அரசாங்கம் ஆதரித்துள்ளது. சோவியத் யூனியன் மீது சீனமும் குற்றஞ்சாட்டியுள்ளது.

கடந்த ஒரு நூற்றாண்டுக்கு முன்னால், அத்தீவுகள் நான்கும் ஜப்பானுக்கு சொந்தம் என ஜார்ரஷ்யா ஜப்பானோடு உடன்பாடு கொண்டுள்ளது என்றும் இச்சரித்திர உண்மையை மறுக்க முடியாது என்றும்சீனத்தின் நவசீன செய்தி நிலையம் கூறியுள்ளது.

அந்நான்கு தீவுகளும் ஜப்பானுக்கு சொந்தமானது என ஜப்பான் உரிமை கொண்டாடுவதை நிராகரித்து சோவியத் யூனியன் வெளிநாட்டு அமைச்சர் குரோமிகோசோவியத்கட்சி பத்திரிகையொன்றில் எழுதியுள்ளார். அதில் ஜப்பானின் உரிமை ஆதாரமற்றது என்றும் ஜப்பானின் இக்கோரிக்கைக்கு நாம் எவ்வோதும் பதில் கொடுக்க முடியும் என்றும் அவர் கூறியுள்ளார்.

# ★★★★★ பாசிஸ அமைப்பு ★★★★★

**— ரஜனி பாமி தத் —**

**பிரிட்டிஷ் கம்யூனிஸ்ட் கட்சியின் ஸ்தாபக தலைவர்களில் ஒருவரும், சர்வதேச கம்யூனிஸ்ட் இயக்கத் தலைவர்களில் ஒருவருமான காலம்சென்ற தோழர் ரஜனி பாமி தத் அவர்கள் எழுதிய 'உலக அணியில் பிரிட்டன்' எனும் நூலிலிருந்து கீழ்வரும் கட்டுரை தரப்படுகிறது.**

அனைத்து நாடுகளிலுமுள்ள மதிப்பு வாய்ந்த செல்வாக்குமிக்க படித்த மக்களில் பெரும்பகுதியினரை ஏமாற்றுவதிலும் அவர்களது ஆதரவைப் பெறுவதிலும் பல ஆண்டுகளாகப் பாசிசம் வெற்றி பெற்றிருந்தது. கமயூனிசத்திற்கு எதிரான அல்லது ஜனநாயக முன்னேற்றத்திற்கு எதிரான ஓர் அரணாக இது திகழப்போகிறது எனகுருட்டுத்தனமாக நினைத்துக் கொண்டு இவர்கள் எல்லாம் பாசிசத்தின் ஆதரவாளர்களாக அதனை அண்டிப் பிழைப்பவர்களாக மாறிவிட்டார்கள். மேலும் இவர்கள் இதனுடைய குற்றங்களைக் குறைத்துச் சொல்லி, இதன் மூலம் நன்மைகள் பல உருவாக இருப்பதாகச் சொல்லிப் புகழ ஆரம்பித்தார்கள். அரசியல்வாதிகளும், செல்வச் சீமான்களும் ஆயுதம் விற்பவர்களும் பாசிசத்திற்குத் தேவையான அனைத்தையும் கொடுத்துதவினார்கள். இப்படிக் கொடுக்கப்பட்டவை அனைத்துமே இறுதியில் அவர்களது சொந்த நாட்டு மக்களுக்கு எதிராகவே பிரயோகிக்கப்பட்டன.

## ஏதாவதொரு வழியில் கொடிய குறிக்கோளை அடைய முயற்சி

பாசிசம் நடத்திய கொடுமைகள் எல்லாம் அதிகாரப்பூர்வ பத்திரிகைகளில் வெளியிடப்பட்டுவிடாமல் தடை செய்யப்பட்டன. கைதி முகாம் பற்றிய வெளிநாட்டவர் அறிக்கைகள் அரசாங்க அதிகாரிகள் கையில் இருந்தபோதிலும் அவை போர் மூள்வதற்கு முன்புமக்களுக்கு வெளியிடப்படவில்லை. "பேராசிரியர் மேம்லாக்" போன்ற நாஜி எதிர்ப்புப் படங்கள் தடைசெய்யப்பட்டன. நாஜிகள் நடத்தக்கூடிய பொது ஊர்வலங்களிலும், அவர்களுக்கு நெருங்கியவர்கள் மட்டும் கலந்து கொள்கின்ற கூட்டங்களிலும் இந்த இரத்த வெறி பிடித்த குண்டர்களின் விருந்தினர்களாக மேட்டுக் குடியினரும், கோடீஸ்வரர்களும் பத்திரிகை அதிபர்களும், அரசியல்வாதிகளும், பேராசிரியர்களும் மற்றும் விளம்பரதாரர்களும் நண்பர்களாக கலந்து கொண்டனர்

இதற்குகைமாருக இந்தப் பேர்வழிகள் எல்லாம் மேஃபேரின் (இலண்டன் நகரத்தின் செல்வவளமிக்க மேற்குப் பகுதி) நாயகர்களாக இந்த நாட்டில் கௌரவிக்கப்பட்டார்கள், கிராமப்புற மாளிகை விருந்துகளுக்கும் அழைக்கப்பட்டார்கள், பகுமானிசத்தோடும் "ஒழுங்கை மீண்டும் நிலை நிறுத்துதல்" என்ற பெயரோடும் மதமும் இந்த சதித்திட்டத்தில் சேர்த்திழுக்கப்பட்டது. இங்கு சமாதானமும் வெகு வேகமாகப் பேசப்பட்டது. இந்த நற்குடி மக்களில் பெரும் பகுதியினர் பொதுவாழ்க்கையிலிருந்து இன்னும் மறைந்து விடவில்லை; சில பேருடைய கண்கள் திறக்கப்பட்டு விட்டன. இன்னும் சிலபேர் வாயை மூடிக்கொண்டு புத்திசாலித்தனமாக இருந்துவிடுகிறார்கள். அல்லது இந்த நேரத்திற்கு மட்டும் பொதுவாழ்க்கையில் வேறு துறைகளில் பிரபலம் அடைய முயற்சிக்கிறார்கள். ஆனால் இவர்கள் இன்னும் செல்வாக்கோடுதான் இருக்கிறார்கள். வாழ்க்கையைப்பற்றி அவர்களது அடிப்படை கண்ணோட்டம் இன்னும் மாறவே இல்லை. எனவே ஆபத்து இன்னும் இருக்கத்தான் செய்கிறது. சரியான சந்தர்ப்பத்தில் இந்தப்பேர்வழிகள் தங்களது பழைய வழிக்குத்திரும்ப முயற்சிப்பார்கள். சுற்றிவளைத்துச் சென்றாவது அல்லது ஏதாவது புதிய வழியிலாவது தங்களது கொடிய குறிக்கோளினை அடைய முயற்சிப்பார்கள். அதனால்தான், இந்த நாட்டில் தற்பொழுது பாசிசம் பொதுமேடைகளில் அனைவராலும் பழித்து ஒதுக்கப்பட்டுக்கொண்டிருந்தாலும், இதனுடைய உண்மை சொரூபத்தைத் தோலுரித்துக்காட்ட வேண்டிய அவசியம் இன்னும் இருந்து கொண்டேதானிருக்கிறது.

## சோசலிசம் — சமுதாயத் தீமைகளை ஒழித்துக்கட்டும் மாமருந்து

மேலும், அனைத்து நாடுகளிலுமுள்ள தொழிலாளர்களிலும் மத்திய தர வர்க்கத்தினரிலும ஒரு பகுதியினர் பாசிஸத்தினுடைய பொருளாதார சமூக அமைப்பின் திறமையைக்கண்டு ஏமாந்து போய் விடுகிறார்கள். அவர்கள் ஹிட்லரின் "தேசிய-சோசலிசத்தோடு", சோசலிசத்தைப்போட்டுக் குழப்புகிறார்கள். இந்த வகையில் பொய்ப் பிரச்சாரத்திற்கும உண்மைக்குமிடையில் வேறுபாடுகாணத் தவறிவிடுகிறார்கள்.

அனைத்து நாடுகளிலுமுள்ள ஸ்தாபன ரீதியாக நடத்தப்படுகின்ற தொழிலாளி வர்க்கத்தின் இயக்கமும் உருவாக்கப்படுகின்ற பெருவாரியான மக்களின் ஆதரவும் எந்தக் குறிக்கோளை அடைவதற்காகத் திரட்டப்படுகின்றதோ அந்த இலட்சியத்திற்கும்—அதாவது சோசலிசத்திற்கும்—மக்களின் பிரச்சனைகளையெல்லாம், யுத்தத்தையும், வறுமையையும், பழைய வர்க்க சமுதாயத்தின் அனைத்து தீமைகளையும் ஒழித்துகட்டப் போகின்ற மாமருந்தாகத்திகழ்கின்ற அந்த சோசலிசத்திற்கும், "தேசிய—சோசலிசத்திற்கும்" அல்லது பாசிசத்திற்கும் எள்ளளவும் சம்பந்தமில்லை.

உற்பத்திச் சக்திகள் அனைத்தையும் பொதுச் சொத்தாக்கி பொது நன்மைக்காக அவற்றை சமுதாய ரீதியில் இயக்குவதின் மூலம் வர்க்கங்கள் அனைத்தையும் ஒழிப்பது தான் சோசலிசம்.

மேலும் மேலும் முன்னேக்கி நடைபயில்வதற்கான முதல் நடவடிக்கை எது? முதலாளித்துவ ஜனநாயக நாடுகளில் வாழ்கின்ற மக்கள், ஏற்கனவே போராடிப்பெற்றுள்ள ஜனநாயக உரிமைகளைக் கட்டுப்படுத்துகின்ற சில தடைகளை நீக்கப்போராடுகின்றனர். சொத்துரிமை கொண்டுள்ள இந்தச் சிறிய ஆளும் வர்க்கத்தின் ஏகபோக ஆதிக்கத்தை ஒழிப்பதின் மூலம் முழு ஜனநாயகத்திற்கான அடிப்படை வித்தை நாட்டுகின்றனர். உழைக்கும் மக்களின் அனைத்து உற்பத்தி சக்திகளையும் சமூக உடைமையாக்குவதின் மூலமும், இதன் பலனை அனைத்து மக்களும் அவர்களது உழைப்பிற்கேற்றபடி (இறுதியில் கம்யூனிச சமுதாயத்தில் தேவைக்கேற்றபடி) பகிர்ந்து கொள்ளச் செய்வதின் மூலமும் சமுதாயத்தில் ஒரு பகுதியினர் மற்றொரு பகுதியினரைச் சுரண்டுவது, தடுத்து நிறுத்தப்படுகிறது. முழுச் சுதந்திரமுள்ள சமத்துவக்குடி உரிமைக்கும், உண்மையான சுதந்திரத்திற்கும் வேண்டிய தவிர்க்க முடியாத அடிப்படை இடப்பட்டு விடுகிறது.

## ஏகபோகவாதிகளின் அதிகாரம்

ஆனால், பாசிஸமோ அடக்குமுறை கொண்டு வர்க்க பேதத்தையும் மிகப்பெரிய ஏகபோகக் கூட்டுக்களுக்கும் பெருவாரியான வெகுஜனங்களுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டையும் நிலைநிறுத்தப்பார்க்கிறது. மேலும் இந்த வெகுஜனங்கள், முதலாளித்துவ ஜனநாயக நாடுகளில் வாழும் மக்கள் பெறும் உரிமைகளைக்கூட பாசிசஆட்சியில் முழுமையாக இழந்து விடுகிறார்கள். ஏகபோகவாதிகளின் அதிகாரம்அரசு அதிகாரத்தை தன்கையில்வைத்துக்கொள்வதின் மூலம், அடிமைப் படுத்தப்பட்ட மக்கள் மீதான அரசியலமைப்பு அதிகாரமாகநிலைநிறுத்தப்படுகிறது. மேலும் எல்லாவிதமான பொய்ப்பிரச்சாரத்தின் மூலமும், பயமுறுத்தலின் மூலமும் இந்த அதிகாரம் பராமரிக்கப்படுகிறது. இதுதான் பாசிஸத்தின் சாரம்—இதிலிருந்துதான் ஜனநாயக அழிப்பு, கலாச்சாரத்தின் மீதும் சுதந்திரமான சிந்தனையின் மீதும் போர்தொடுத்தல், திட்டமிட்ட காட்டுமிராண்டித்தனம்; அண்டை நாடுகளைப் பிடித்தல், உலகத்தையே வெற்றி கொள்ளத் திட்டமிடுதல் ஆகிய அனைத்தும் பின் தொடர்கிறது.

## நாஜிகளுக்கு நிதி உதவுவது யார்?

பெரிய தொழிலதிபர்களும், ஜங்கர்நிலப்பிரபுக்களும், பாங்கர்களும், இரும்பு மன்னர்களும் ஹோகன் ஜோலரன் அரசாங்கமும இதன் உண்மையான குறிக்கோள் என்ன என்பதைப் புரிந்து கொண்டவுடன் இந்த மாதிரியான 'சோசலிசத்தின்'பின் அணி திரள்வது ஆச்சரியமான விஷயமில்லை அல்லவா! ஹிட்லருக்கு மிகப் பெரிய தொழிலதிபர்கள் எல்லாம் நிதி உதவி செய்தார்கள் என்பது 1924ல் நடந்த ஹிட்லர்—லுடன்டார்ப் வழக்கிலும், பாவேரியன் மாநில [ஹிட்லர் பிறந்த மாநிலம்] சட்டமன்ற விசாரணைக் குழுவிலும் நிரூபிக்கப் பட்டுள்ளது. ஹிட்லரின் வெளிநாட்டு ஆதரவாளர்களில் டிட்டரிடிங், க்ருகர், ஃபோர்டு ஆகியோரும் இருந்தனர். சினிடர்—குருசாட் ஆகியோரால் நாஜிகளுக்காக நடத்தப் பட்ட 'ஸ்கோடா' ஆயுதச்சாலையின் டைரக்டர்களும் நிதி உதவி செய்தனர் என்று, 1932 பிப்ரவரி 11ல் பிரெஞ்சு நாடாளுமன்றத்தில் பால்பாரேஎன்பவர் கூறியுள்ளார்.

சுரங்க முதலாளிகள் சங்கத்தின் ஸ்தாபகரும்.எஃகு டிரஸ்டின் கௌரவத்தலைவருமான கிர்டாப் 1927 ஆம் ஆண்டு நாஜி கட்சியில் சேர்ந்தார். 1931 ஆம் ஆண்டில் சுரங்க முதலாளிகள் சங்கம் ஒருடன் கரிக்கு 6 பென்ஸ் வீதம் லெவி வசூலித்து நாஜிகளுக்கு நிதி உதவி அளித்தது. இதற்காக கரி விலையையும் உயர்த்தியது. இந்தநிதி அளிப்பு 1932 :ஆண்டில் உச்ச நிலையை அடைந்தது. அந்தஆண்டு ஆகஸ்டு மாதத்தில் நடந்த ஜனாதிபதி தேர்தலுக்காக ஒரு சில தினங்களுக்குள் 30 லட்சம் மார்க்குக்கு மேலாக இந்த எஃகு டிரஸ்டு வசூலித்து நாஜிகளுக்கு வழங்கியது.

ஆனால், இநதப் "புதிய ஒழுங்கில்" தொழிலாளர்களின் நிலை என்ன? பெருவாரியான வெகுஜனங்களின் நிலை என்ன? நாஜிகள் அதிகாரத்திற்கு வருவதற்கு முன்பாக, தொழிலாளர்களின் ஆதரவினைப் பெறுவதற்காக அளவில்லாத முறையில் பொய்களை அள்ளியிறைத்தார்கள் ஏமாற்றுவித்தைகளை நடத்திக் காட்டினார்கள். உதாரணமாக இத்தாலிய பாசிஸ்டுகள், அரச உரிமையை அழித்து விடுவதாகவும் இராணுவத்திற்கு கட்டாய ஆள்சேர்ப்பினை ஒழித்து விடுவதாகவும், மாதா கோவிலுக்குச் சொந்தமான நிலங்களைப் பறிமுதல் செய்வதாகவும், பங்கு மார்க்கெட்டுகளை ஒழித்து விடுவதாகவும் வரையறுக்கப்பட்ட பொறுப்புடையகம்பெனிகளையும்பாங்குகளையும் கலைத்து விடுவதாகவும் தொழிற்சாலைகள் நிர்வாகத்தை .தொழிலாளர்களிடமும் வல்லுநர்களிடமும் ஒப்படைத்து விடுவதாகவும் — இப்படியெல்லாம் உறுதிமொழிகளை அள்ளி வீசினார்கள். 1920-ம் ஆண்டில் உருவாக்கப்பட்டு 1926-ம் ஆண்டு காங்கிரசில் "மாற்ற முடியாதது" என அறிவிக்கப்பட்ட நாஜிகட்சியின் 25 அமச திட்டத்தில் பல்வேறு விஷயங்களுடன் கீழ் வரும் குறிக்கோள்களும் கொடுக்கப்பட்டுள்ளன. (ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு வசதியாக நடைமுறை எப்படி இருந்தது என்பதும் கொடுக்கப்பட்டுள்ளது)

| திட்டம் | நடைமுறை |
|---|---|
| அம்சம் 1 | |
| 'நாடுகளுடைய சுய-நிர்ணயிப்பு உரிமையின் அடிப்படையில் ஜெர்மானியர்கள் அனைவரையும் ஒன்றுபடுத்தி பிரம்மாண்டமான ஜெர்மனியை உருவாக்குவது." | ஐரோப்பாவை ஆயுத பலத்தால் வெற்றி கொள்வது. |
| அம்சம் 2 | |
| "சம்பாதிக்காத வருமானத்தை ஒழிப்பது. வட்டி—அடிமை முறையை ஒழிப்பது." | 1932க்கும் 37க்கு மிடையில் கோடீஸ்வரர்களின் எண்ணிக்கை 180 ஆக உயர்ந்தது. |
| அம்சம் 12 | |
| "போர்க்கால இலாபங்களைப் பறிமுதல் செய்வது" | ஏகபோக எஃகு முதலாளியான க்ருப்ஸின் இலாபம் 1940ல் 42.1கோடிமார்க்குகள் |
| அம்சம் 13. | |
| டிரஸ்டுகளை தேச உடைமையாக்குவது | ஹிட்லரின் முதல் நான்கு ஆண்டு ஆட்சியில் குறிப்பிடத்தக்க அம்சம் என்னவென்றால் கனரகதொழிற்சாலைகளில் மிகப் பெரிய டிரஸ்டுகள் உருவானதேயாகும்" (பேராசிரியர்: என். எச். ராபர்ட்ஸ்) |
| அம்சம் 17. | |
| "கந்து வட்டிக்காரர்களுக்கும் கொள்ளை இலாபக்காரர்களுக்கும் மரண தண்டனை அளிப்பது" | கம்யூனிஸ்டுகளையும் சோசலிஸ்டுகளையும் தொழிற்சங்க வாதிகளையும் கூட்டம் கூட்டமாகக் கொலை செய்தது. |

பாசிசம் பதவிக்கு வந்தவுடன் அது இராணுவத் தளபதிகளுக்கும் லாப வெறியர்களுக்கும் ஒரு புதிய சொர்க்கத்தை உருவாக்கும், பொதுமக்களுக்கு நரகத்தை உருவாக்கும் எல்லையற்ற சுரண்டலுக்கு வழிவகுக்கும், உரிமைகளை முழுமையாக முடமாக்கும்-என்பதைத் தொழிலாளி வர்க்கம் விரைவில் உணர்ந்து கொள்ளும்.

ஜெர்மன தொழிற் சட்டத்தில் தொழிலாளர்களுக்கு உரித்தான இடம் எது என்பதை அந்நாட்டின் பாசிஸ்ட் ஆட்சி கீழ்வரும் முறையில் வெளிப்படுத்தியது:

ஜெர்மன் தொழிற்சட்டப்பிரிவு-1:—

"ஒரு தொழில் நிறுவனத்தில் முதலாளி என்பவர் தலைவராவார். அதில் உழைக்கும் ஊழியர்கள் அவரை பின்பற்றி நடப்பவர்களாவார்கள். இரு சார்பினரும் ஒன்றுக உழைத்து, அந்தத் தொழில் நிறுவனததின் நோக்கங்களை நிறைவேற்றவேண்டும். சமுதாயத்தின பொதுநலனுக்காகவும் அரசாங்கத்தின் பொதுநலனுக்காகவும உழைக்க வேண்டும்."

ஜெர்மன் தொழிற் சட்டப்பிரிவு-2:—

தொழில் நிறுவனத்தின் தலைவர், அந்தத் தலைவரைப் பின் பற்றுவோர் (தொழிலாளி) ஆகிய இரு சார்பினருக்கு மிடையே முடிவுகளை எடுப்பவர் தலைவர்தான். அந்ததொழில் நிறுவனம் சம்பந்தப்பட்ட எல்லா முடிவுகளையும அவரே செய்வார்".

(இவை, 1934 ஜனவரி மாதத்தில் நிறைவேற்றப் பட்ட தேசிய தொழிலாளர் நிறுவனச் சட்டம் என்ற சட்டத்தின் பிரிவுகள்)

ஹிட்லர் பதவிக்கு வந்த பிறகு, எல்லா தொழிற் சங்கங்களும், தொழிலாளர் வர்க்க ஸ்தாபனங்களும் அழிக்கப்பட்டன. அந்த ஸ்தாபனங்களுக்குச் சொந்தமாக இருந்த நிதிகளும் கைப்பற்றப்பட்டன. இவைகளுக்குப் பதிலாக, "தொழிலாளர் அணி" என்ற ஓர் அமைப்பு உருவாக்கப்பட்டது. இந்த அணியில் முதலாளிகளையும், தொழிலாளிகளையும் ஒரே ஸ்தாபனமாக இணைத்து நாஜி கட்சியின் (ஹிட்லர் கட்சியின்) கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தனர்.

மேற்கூறிய தொழிலாளர் அணியின் நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்படவில்லை. மாருக, நாஜி கட்சியினல் நியமிக்கப்பட்டனர். இந்தத் தொழிலாளர் அணி சம்பளம், வேலை நேரம், தொழிலாளர் வேலை சம்பந்தப்பட்ட பிரச்சினைகள்—ஆகிய எதைப் பற்றியும் பேசக்கூடாது என்று விதிக்கப்பட்டது.

ஜெர்மனியில் 'வைமார்' என்ற குடியரசு அமைப்பு தோன்றிய காலத்திலிருந்து தொழிலாளர்கள் போராடிப் பெற்று அனுபவித்து வந்த முக்கிய உரிமைகளுள் ஒன்றுன தேர்ந்தெடுக்கப்பட்ட "தொழிற்சாலை கவுன்சில்" என்பது ஹிட்லர் பதவிக்கு வந்த பின்னர் அழிக்கப்பட்டது. அதற்கு பதிலாக, "சந்தேகத்திற்கிடமில்லாத அரசியல் பார்வையுடைய"நபர்கள்பொறுக்கி எடுக்கப்பட்டு அமைக்கப்பட்ட "நம்பிக்கைக் குழுக்கள்" என்பவை முதலாளிகளால் நியமிக்கப்பட்டன.

இந்தக்குழுக்களுக்காக பொறுக்கி எடுக்கப்படும் நபர்களை அந்தத் தொழிற்சாலையில் உள்ள தொழிலாளர்கள் அங்கீகரிக்கவேண்டும். ஆனல் இந்த அமைப்பு கூட 1935-க்குப் பிறகு கைவிடப்பட்டது.

சம்பளம், வேலை நேரம், உழைப்பாளர் வேலை செய்யும் நிலைமைகள் ஆகிய எல்லா பிரச்னைகளையும் முதலாளி தான் தீர்மானிப்பார்என்ற ஏகபோக அதிகாரம் தொழிற் சட்டத்திலே வழங்கப்பட்டது. (தொழிலாளர் டிரஸ்டிகள் என நியமிக்கப்பட்டவர்கள் தொழிற்சச்சரவுகள் ஏற்படும் போது பயன் படுத்தப்படுவார்கள் ஆனல், அவர்கள் அந்தத் தொழிற்சாலையின் தொழில் சம்பந்தமான சாதாரண செயல் முறை எதிலும் தலையிட அனுமதிக்கப்படவில்லை)

இத்தகைய சட்டத்தின் மூலம் முதலாளி, அந்தத் தொழில் நிறுவனம்சம்பந்தமாக எல்லாமுடிவுகளும்வழங்க முழு அதிகாரம் வழங்கப்பட்டார். அவையாவன:

1) அன்றுட வேலை நேரம் ஆரம்பமாவது, முடிவது இடைவேளை ஆகியவற்றை முடிவு செய்வது.

2] ஊதியங்கள் வழங்கும் நேரம், அவற்றைவழங்கும் தன்மை ஆகியவற்றை முடிவு செய்வது.

3] வேலை, அல்லது ஒப்பந்த வேலை சம்பந்தமாகக் கணக்கிடுவதில் விதிமுறைகளை நிர்ணயிப்பது,

4) தண்டனை வழங்குவது சம்பந்தமாக அதன் தன்மை, அளவு, அபராதங்களை வசூலிப்பது சம்பந்தமான விதிமுறைகள்.

5) சட்ட வரம்புக்குள் வராத வழக்குகள் சம்பந்தமாக ஒரு தொழிலாளியை முன்னறிவிப்புக் கொடுக்காமலேயே வேலையிலிருந்து நீக்குவது பற்றிய காரணங்களை முடிவு செய்வது.

6) சட்டவிரோத வேலை நீக்கத்திற்குள்ளாகும் தொழிலாளர்களுக்கு ஒரு தொழில் நிறுவனத்தில் உள்ள விதிமுறைகளின்படி கொடுக்கப்படவேண்டிய நஷ்ட ஈட்டைக் கொடுக்காமல், அதையும் கைப்பற்றிப் பயன் படுத்திக் கொள்ளுதல்,

இவைதான், தொழிற்சாலையின் முதலாளிகளுககு வழங்கப்பட்ட அதிகாரம்.

## பாசிஸ்ட் திட்டம் அன்று அமலானது எப்படி?

இவ்வாறு, நாஜி பாசிஸ்ட் ஆட்சியில் செய்யப்பட்ட மாறுதலை அமெரிக்கப் பத்திரிகையாளரான பேராசிரியர் ஆர் ஏ பிராடி என்பவர், நியாயமாகவே கீழ் வருமாறு குறிப்பிடுகிறார்:

"ஆங்கிலேய பாக்டரி அமைப்பின் ஆரம்பகாலத்தில் பின்பற்றப்பட்ட ஒப்பிடமுடியாத—கங்குகரையற்ற—கொடுங்கோன்மை நிலவிய அந்தக் காலம முதற்கொண்டு, தொழிற்சச்சரவுகள் சம்பந்தமான கடுமையான வரலாற்றுப்பின் னணியில்கூட, சிறிதளவுதயவு தாட்சண்யம் காட்டாத—மனிதத் தன்மையற்ற — ஒரு முதலாளி தனது அரசாங்கத்திடமிருநது இத்தகைய சலுகைகளைப் பெற்றுக் கொண்டதே இல்லை"

(1937-ல் நியூயார்க்கில் பேராசிரியர் ஆர். ஏ. பிராடி வெளியிட்ட "ஜெர்மன் பாசிசத்தின் அமைப்பும் உள்ளடக்கமும்" என்னும் நூலிலிருந்து)

திருட்டுத்தனமும், பொய்களும், அடக்குமுறை வெறியாட்டமும, யுத்தமும நிறைந்த இந்தப் பாசிஸ்ட் திட்டத்தை எவ்வாறு அன்று அமுல் நடத்த முடிந்தது?

அரசியல் வரலாற்றில் கண்டிராத வகையில் அப்பட்டமான அயோக்கியத்தனங்கள், வாய்ச்சவடால, லஞ்ச—ஊழல, மிரட்டுதல், ஒளிவுமறைவற்ற கொள்ளைத தனம்—ஆகிய வழிமுறைகள்மூலம பாசிஸ்டுகள் தங்களது திட்டத்தை நிறைவேற்றினார்கள். வெகுஜனங்களைப பச்சையாக ஏமாற்றுதல், இன வெறியைத் தூண்டுதல், யூத ஒழிப்பு வெறியை அமுல நடத்துதல், வரையறையற்ற வாக்குறுதிகளை அள்ளி வீசுதல், சிந்தனைத்திறன் இல்லாதவர்களை படாடோப விளம்பரங்களின் மூலம மயக்கி ஏமாற்றுதல், வாலிபர்களை லஞ்ச ஊழல் மூலம இரையாக்குதல், இதற்கு ஒத்துழைக்கும ரவுடிகளுககும அயோககியர்களுக்கும, உளவாளிகளுக்கும் லஞ்சம வழஙகுதல், அப்பாவிகளை மிரட்டுதல், பாசிஸட் ஆட்சியை உறுதியாக எதிர்த்து நிற்பவர்களை அடித்து நொறுக்குதல்; சித்திரவதை செய்தல், கொலை புரிதல், ஆகிய இவைதான் பாசிஸ்டுகள் பின்பற்றிய வழிமுறைகள்.

---

# கேரள ஆளுங் கட்சியினரின் ஒரு வார விழா எதற்காக?

கேரள கூட்டணி அரசாங்கம் தனது 5 ஆண்டு காலம்நீடித்ததை குறிக்கும் வகையில் அக்டோபர்முதல் வாரத்தில் ஒருவாரவிழாக் கொண்டாட்டம் நடத்த படாடோப ஏற்பாடுகள் செய்தது.

அம்மாநிலத்தில் முந்திய அரசாங்கங்கள் எதுவும் 5 வருட காலம் நீடித்ததில்லை. ஆகையினல் ஒரு அமைச்சரவை தனது முழுக்காலததிலும நீடிக்கும பொழுது, அந்நிகழ்ச்சியை கொண்டாடுவதற்கான அவர்கள் ஆர்வத்தைப்பற்றி யாரும் எரிச்சல்பட மாட்டார்கள். அது மட்டுமல்லாமல் அரசியல் சட்டப்படி ஒரு அரசாங்கம் இருக்கவேண்டிய 5 வருட காலத்திற்கும் அதிகமாகக்கூட 6 மாத காலம் நீடிக்கிறது. அவசர கால நிலைமை உதவியுடன் இந்நீடிப்பு நிகழ்கிறது.

5 வருடத்திற்கும் அதிகமாக நீடித்து அதற்கு விழா நடத்துபவர்களின் ஆட்சி சாதித்ததென்ன?

இதுபற்றி தோழர். இ எம் எஸ் நம்பூதிரிபாட் மார்க்சிஸ்ட்கட்சியின் கேரளதினசரி 'தேசாபிமானி'யில் கட்டுரை ஒன்று எழுதியுள்ளார். அதன் சுருக்கம் பின் வருமாறு:

## 1957, 1967-ம் வருட கொள்கைகள்

பிளவுபடாத கம்யூனிஸ்ட்கட்சியின் அரசாங்கம் 1957-ல் அமைக்கப்பட்டது. அதனை நாட்டில் உள்ள அனைத்து இடதுசாரி சக்திகளும் போற்றின.

அந்த அரசாங்கம 27 மாதங்கள்தான் நீடித்தது. ஆனாலும், நாட்டின் ஏனைய மாநிலங்கள் கடைப்பிடிக்க வேண்டிய சரியான பாதைகளை பிரகாசமாகக் காட்டியது. அவைகளில் மிக முக்கியமானவை நிலச்சீர்திருத்தங்கள், கல்வி முறைசீர்திருத்தம், புதிய போலீஸ் கொள்கை ஆகியனவாகும். இவை நாடு முழுவதிலுமுள்ள ஒன்றுபட்ட வெகுஜன இயக்கங்களுக்கு நம்பிக்கையும ஆகர்ஷிப்பும் அளிககும் நடவடிக்கைகளாக இருந்தன.

மேலும், இயற்கையாகவே இநடவடிக்கைகள் கேரள மாநிலததிலும நாட்டின் ஏனைய பகுதிகளிலும் உள்ள பிற்போககு சக்திகளின் ஆத்திரத்தைக் கிளப்பின. அப்படிப்பட்ட நடவடிக்கைகளைக் கொண்ட அந்த அரசை அழித்தொழிப்பதிலும் பிற்போக்கு சக்திகள் வெற்றியும் கண்டன.

அந்நிகழ்ச்சியின் கொண்டாட்டமாக, 1960-ல் ஒரு புதிய கம்யூனிஸ்ட் எதிர்ப்பு அரசாங்கம் அமைக்கப்பட்டது. அந்த அரசாங்கமானது 57-ல் அமைக்கப்பட்ட கம்யூனிஸ்ட் அரசாங்கம் கடைப்பிடித்த கொள்கைகளிலிருந்து பின்வாங்கியது.

1967-ல் 8 மாநிலங்களில் காங்கிரசு அல்லாத ஆட்சிகள் ஏற்பட்டபோது அவர்களுக்கு மீண்டுமொரு அடி ஏற்பட்டது. அந்த எட்டு மாநில அரசாங்கங்களில் 2 அரசாங்கங்கள் —கேரளத்திலும், மேற்கு வங்கத்திலும-மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையிலான இடதுசாரி சக்திகளின் அரசாங்கமாகும்.

ஒன்றுபட்ட கம்யூனிஸ்ட் கட்சியின் திருத்தல்வாதத்தலைமையானது, 1955-56-ல் வர்க்க சமரசத்தை நோக்கிநடைபோட்டது. அப்போக்கு கட்சியை1964-ல் இரண்டாக உடைத்தது- வலதுகம்யூனிஸ்ட்களின் அதே வர்க்க சமரச கொள்கைதான் 1967-ல கேரளத்திலும மேற்கு வங்கத்திலும் அமைந்த இடதுசாரி அரசாங்கங்களைக கவிழ்த்தன.

1969-லிருந்து வலது கம்யூனிஸ்ட்கட்சியைச்சேர்ந்த திரு அச்சுதமேனன் ஆட்சி நடத்தி வருகிறார். முதலில் காங்கிரஸ் கட்சியின் ஆதரவுடன் முதலமைச்சராக இருந்த அச்சுதமேனன் 1970-ல் அக்டோபரில் காங்கிரசுடன் கூட்டு அரசாங்கம் அமைத்து முதலமைச்சரானார்.

1957-59-ம் ஆண்டு காலத்தில் இருந்த கேரள அரசாங்கம எடுத்த மூன்று கொள்கை சமபந்தமாக அச்சுதமேனன் அரசாங்கம் என்ன செய்தது என்பது பற்றி சிறிது ஆய்வோம்.

## நிலச் சீர்திருத்தம்

1959-ம் ஆண்டு ஜூனில் கேரள சட்டசபை நிறைவேற்றிய விவசாய உறவு மசோதா, கேரளாவுக்கு மட்டுமின்றி இந்தியாவின் ஏனைய பகுதிகளுககும பிரகாசமான வழிகாட்டியாகும். ஏனைய அரசாங்கங்கள் உறையும் பொருளாக வைத்திருநத சில வரமபுக்குட்பட்ட சீர்திருத்தங்களை அமுல்படுததும வகையில ஏற்படுத்தபபட்ட முதல் நடவடிக்கை அந்நிலச் சீர்திருத்த மசோதா. இம மசோதாவின் எதிரொலி நாடு முழுவதிலும் இருந்தது.

1957—59லிருந்து உருவான நிலச் சீர்திருத்தங்களுக்கு கேரள கூட்டணி அரசாங்கம், ஆரம்பகர்த்தவாக இருந்தது.

1969-ம் ஆண்டு அக்டோபரில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையிலான அரசாங்கம்1969ம் ஆண்டு சட்டத்தை நிறைவேற்றினலும்கூட 1957—59-ம் வருட நிலச் சட்டத்தின வாரிசுகள தாங்கள்தான் என அச்சுதமேனனின் தலைமையில் உள்ள அரசாங்கத்தினர் கூறிக் கொள்கின்றனர்.

ஆடை அலங்காரம் செய்யப்பட்ட யானைகளுடன் கூடியவிழாக்களை நடத்துகின்றனர். அவர்கள்இது பற்றிய பிரமாண்டமான விளமபரத்தை ஏகபோக முதலாளிகளால் கட்டுப்படுத்தப்படும் பத்திரிகைகளின் மூலமும் நாட்டில் உள்ள ரேடியோக்கள் மூலமும மட்டுமில்லாமல் அன்னிய நாட்டு பத்திரிகைகளிலும் செய்கின்றனர்.

ஆனல் இப்படிப்பட்ட திருவிழாக்களின் திரைக்குப் பின்னல் கேரள கூட்டு அரசாஙகம செய்து இருப்பது என்ன?

அச்சீர்திருத்தங்களுக்கெல்லாம் முதுகெலும்பாக விளங்கிய விவசாயிகள் மீதும, விவசாயததொழிலாளர்கள் மீதும் தொடர்ச்சியான தாக்குதலைத தொடுத்திருப்பதுதான்.

சட்டத்தால் வழங்கப்பட்ட உரிமையின்படி, குடிசையில் வாழ்ந்த மககள், அககுடிசை இருந்த நிலத்தின மீது உரிமை கொண்டாடியபோது அவர்களுககுக் கிடைததது என்ன?

மிருகத்தனமான அடக்குமுறை. குடிசைவாழ் மக்களும் விவசாயத தொழிலாளர்களுமதாங்களவாழ்ந்த குடிசை இருநத நிலத்தை சொந்தமாககிக கொள்ள முடிந்தது என்ருல் அதற்கு காரணம அவர்கள் இழந்த ரததமும செய்த தியாகமுமே.

(... பக்கம் பார்க்க)

இந்திய சுதந்திரப் போராட்ட வரலாறு

# மிகப் புராதன கலாச்சாரமும் ஒரு சுமையே

பதினும் நூற்றுண்டு முதல் படிப்படியாக இந்தியாவில் மேலாதிக்கம் நிறுவிய ஐரோப்பியர்களின் கலாச்சாரத்தைக் காட்டிலும், மிகப் பழைமையான ஒரு கலாச்சாரம் இந்தியாவுக்கு உண்டு என நாம் பெருமைப்படுவது உண்டு. அப்படி நாம் பெருமையடைவதில் தவறேதும் இல்லை. காரணம் அது ஓர் உண்மையாகும்.

ஆனல், எவ்வளவு புராதனமான கலாச்சாரமாக இருந்தபோதிலும், ஐரோப்பிய வர்த்தகர்களின் வருகையை ஒட்டி இந்தியாவின் கலாச்சாரமும், சமூக வாழ்க்கையும், பொருளாதார அடித்தளமும் சுக்குநூருகத் தகர்ந்து விட்டன. அன்னிய வியாபாரிகள் இங்கு இருப்பிடத்தை உறுதிப்படுத்த ஆரம்பித்தது முதல், அவர்களும் அவர்களின் நலன்களைப் பேணுவதற்காக செயல்படுகின்ற ஆட்சிக்கூடமும் இணைந்து நடத்திய பலாத்காரத்தினுல்தான் இந்தியாவின் பழைமையான சமூக அமைப்பு முழுமையாக நொறுக்கப்பட்டதென்று சாதாரண தேசியவாதிகள் கூறுவதுண்டு. அப்படியென்ருல், மிகப்பழைமையான சிறந்ததொரு கலாச்சாரத்தை, அதோடு ஒப்பிடும்போது மிகவும் தாழ்ந்த நிலையிலுள்ள ஒரு கலாச்சாரத்தின் பிரதிநிதிகளான அன்னிய நாட்டவர்கள் மிகக் கேவலமான முறையில் வேரறுத்து எறிந்துவிட்டார்கள் என்றுதான் நினைக்க வேண்டியுள்ளது.

## அடக்கியவர்கள் அடங்கினுர்கள்

மேற்கூறிய நிகழ்ச்சிகள், வரலாற்று அனுபவங்களுக்கு முற்றிலும் எதிராக உள்ளன. இந்திய, ஐரோப்பிய கலாச்சாரங்களை ஒப்பிடும்போது, மிகத் தாழ்ந்த நிலையிலுள்ள கலாச்சாரத்தை பிரதிநிதித்துவப்படுத்துகின்ற மக்கள், உயர்ந்த கலாச்சாரமுள்ள நாடுகளை இதற்கு முன்புகூட உலகில் பல இடங்களில் கீழடக்கினுர்கள். ஆனல், ராணுவ ரீதியிலும், அரசியல் முறையிலும் கீழடக்கப்பட்ட மக்களின் கலாச்சாரத்தை நாசம் செய்வதற்குப் பதிலாக, அந்த உயர்ந்த கலாச்சாரத்தை தாங்களும் ஏற்றுக் கொள்வதற்கு கீழடக்கியவர்கள் நிர்ப்பந்திக்கப்பட்டார்கள். இந்தியாவின் விஷயத்திலும் இதுதான் நடந்தது என மார்க்ஸ் எழுதியுள்ளார், மார்க்ஸ் இதுபற்றிக் கூறுவதாவது;

''இந்தியாவை இடைவிடாமல் தொடர்ந்து ஆக்கிரமித்துக் கைப்பற்றிய அராபியர்கள், துருக்கியர்கள், தார்த்தாரியர்கள், முகலாயர்கள் ஆகிய அனைவரும் விரைவில் **இந்திய மயமானுர்கள்.** வரலாற்றின் நிரந்தரமான விதிக்கேற்ப, பல நாடுகளை வெற்றி கொண்ட அநாகரீகமான காட்டுமிராண்டிகள், தாங்கள் கைப்பற்றிய நாடுகளிலுள்ள மக்களின் உயர்ந்த நாகரீகத்தால் கவரப்பட்டார்கள்.''

இந்தியாவில் ஐரோப்பிய வியாபாரிகள் கால்வைத்ததோடுதான் இந்த வரலாற்று நியதியதில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. அவர்கள் முந்திய ஆக்கிரமிப்பாளர்களைப்போன்று இந்திய மக்களின் நாகரீகத்திற்கு ஆட்படவில்லை என்பது மட்டுமின்றி, அதனை முழுமையாக நாசம் செய்வதற்குத்தான் முயற்சித்தார்கள். இந்த வேலை உச்சநிலையை அடைந்தது எப்போதெனில், ஐரோப்பிய முதலாளித்துவ நாடுகளிலேயே மிகவும் வளர்ச்சியும் பிரபலமும் பெற்ற ஒருபிரிவினரின் (பிரிட்டிஷ்காரர்களின்) வருகையோடுதான். மார்க்ஸ் மேலும் கூறுகிருர்:

''மிகவும் பெருமைப்படத்தக்க ஒரு கலாச்சாரத்தைக் கொண்டிருந்த முதலாவது ஆக்கிரமிப்பாளர்களாக பிரிட்டிஷ்காரர்கள் இருந்தார்கள். அதனுல் அவர்கள் இந்து கலாச்சாரத்திற்குக் கட்டுப்படவில்லை. சுதேசி சமூகங்களை உடைத்தெறிந்தும், சுதேசிகைத் தொழில்களை வேரோடு கெல்லி எறிந்தும், சுதேசி சமுதாயத்தில் இருந்த மகத்தான அம்சங்கள் அனைத்தையும் தகர்த்து தரைமட்டமாக்கியதன் மூலம் அவர்கள் இந்து கலாச்சாரத்தை முழுமையாக நாசம் செய்தார்கள்.''

## ஐரோப்பிய கலாச்சாரம்

இப்படிக் கூறுவதனல், இந்திய கலாச்சாரத்தை நாசம்செய்ததில் பலாத்காரத்திற்கு எந்தப் பங்கும் கிடையாது என்று பொருளல்ல. பலாத்காரம் பரந்த அளவிலும் தயவுதாட்சண்யமில்லாமல் மிருகத்தனமாகவும் ஏவிவிடப்பட்டதைப் பற்றி ஒரு சுருக்கமான விளக்கம் அடுத்த அத்தியாயத்தில் தரப்படும். ஆனல், பலாத்காரத்தைப்போன்று முக்கியத்துவம் உள்ள இன்னெரு உண்மையும் உண்டு. அதாவது, இந்தியாவை விட அதிகமான முற்போக்குத்தன்மையுள்ள உற்பத்தி முறை, உற்பத்தி உறவு ஆகியவற்றின் பிரதிநிதிகள்தான் ஐரோப்பாவிலிருந்து இந்தியாவிற்கு வந்தவர்கள்.

அனேக நூற்றுண்டுகாலமாக, சீனு, இந்தியா, ஈரான், எகிப்து முதலிய கிழக்கத்திய நாடுகளோடு ஒப்பிடும்போது, ஐரோப்பிய நாடுகள் மிகவும் நாகரீகமற்ற நிலையில் இருந்தன. ஆனல், 14, 15-ஆம் நூற்றுண்டுகளில்ஐரோப்பிய நாடுகள் இந்த கிழக்கத்திய நாடுகளை பின்னல் தள்ளத் தொடங்கின. இந்த நாடுகளை வெற்றி கொள்வதற்கு உதவிகரமான நவீன உற்பத்திமுறை,அதற்குப் பொருத்தமான உற்பத்தி உறவுகள், இந்த உற்பத்தி உறவுகளை அடிப்படையாகக்கொண்ட புதுமையான கலாச்சாரம்—இவையெல்லாம் ஐரோப்பாவில் எழுந்து வர ஆரம்பித்தன. இதைப்பற்றி கம்யூனிஸ்ட் அறிக்கை தனக்கே உரிய மிகச் சிறந்த பாஷையில் கீழ்வருமாறு கூறுகிறது:

'அமெரிக்காவைக் கண்டு பிடித்ததும், ஆப்பிரிக்காவின் ''நன்னம்பிக்கை முனை''யைச் சுற்றிச்செல்லும் வழியைக் கண்டதும், உதயமாகிக் கொண்டிருக்கும் பூர்ஷ்வா வர்க்கத்திற்குப் புதிய மேய்ச்சல் இடங்களை அடைவதற்கு வழி காட்டின. கிழக்கு இந்தியாவிலும் சீனுவிலும் கிடைத்த சந்தைகள், அமெரிக்காவில் குடியேற்றம், காலனிகளுடன் நடந்த வியாபாரம், பரிவர்த்தனைப் பொருட்களிலும், விற்பனைச் சரக்குகளிலும் பொதுவாக ஏற்பட்ட பெருக்கம்—இவைகளெல்லாம் வியாபாரத்திற்கும் கப்பல் போக்குவரத்திற்கும் தொழிலுக்கும் அதற்குமுன் கண்டிராத அளவில் உத்வேகம் அளித்தன. அதன் மூலம், அடித்தளம் நொறுங்கித் தள்ளாடிக் கொண்டிருந்த நிலப்பிரபுத்துவ சமுதாயத்தில் இருந்த புரட்சிகர சக்திகள் துரிதமாக வளர்ச்சியை அடைந்தன,,

## பூர்ஷ்வாவர்க்கம் ஏற்படுத்திய அம்மணமான சுரண்டல்

இதன் விளைவு என்ன? இதற்கு கம்யூனிஸ்ட் அறிக்கை பதில் கூறுகிறது, ''பூர்ஷ்வாக்கள் தங்களின் கை ஓங்கிய இடங்கள் அனைத்திலும், எல்லா நிலப்பிரபுத்துவ உறவுகளுக்கும், தந்தை வழி உறவுகளுக்கும், சம்பிரதாய உறவுகளுக்கும் முடிவு கட்டியது. தன்னைவிட ''இயற்கையிலேயே மேம்பட்டவர்'' என்போரிடம் மனிதன் கட்டுண்டு கிடக்கும்படிச் செய்த பல்வேறு நிலப்பிரபுத்துவத் தளைகளை அது தயவுதாட்சண்யமின்றி அறுத்தெறிந்தது. அம்மணமான சுயநலத்தைத் தவிர, உணர்ச்சியற்ற ''ரொக்கப் பட்டுவாடா''வைத் தவிர மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையே வேறு எந்த உறவும் இல்லாமல் செய்து விட்டது. சமய உணர்ச்சியின் வேகம், வீராவேசம் அறிவிலிகளின் உணர்ச்சிவசப்படல், இதனுல் ஏற்படும் தெய்வீக ஆனந்தப் பரவச உணர்ச்சிகளை சுயநலமான கணக்கீடு என்னும் உறைபனி நீரில் அது மூழ்கடித்து விட்டது. எண்ணற்ற, அகற்றமுடியாத, சாஸனப்படுத்தப்பட்ட சுதந்திரங்களுக்குப் பதிலாக,இதயமற்ற சுயநல சுதந்திரத்தை—சுதந்திர வர்த்தகத்தை—பூர்ஷ்வா வர்க்கம் ஏற்படுத்தி விட்டது. ஒரே வார்த்தையில் சொல்வதென்ருல், மதம் சம்பந்தமான பிரமைகளாலும் அரசியல் பிரமைகளாலும் திரையிட்டு மறைக்கப்பட்டிருந்த சுரண்டலுக்குப் பதிலாக, பூர்ஷ்வா வர்க்கம் அம்மணமான, வெட்கமற்ற, நேரடியான, முரட்டுத்தனமான சுரண்டலை ஏற்படுத்தி விட்டது.''

மனித வாழ்க்கையின் எல்லாதுறைகளையும் ஒன்றுபோல் பாதித்த இந்தப் பரிவர்த்தனங்களின் மொத்தத் தொகைதான் முதலாளித்துவ சமுதாயத்தின் வளர்ச்சி இதிலிருந்து உருவான புதிய ஜீவனுடனும் உத்வேகத்துடனும்தான், நமது முன்னேர்களால் ''நாகரீகமற்றவர்கள்'' என்று கேலி செய்யப்பட்ட ஐரோப்பிய வியாபாரிகள் இந்தியாவிற்குள் நுழைந்தார்கள். ஓட்டப்பந்தயங்களின், ஆரம்பகட்டங்களில் எல்லாம் பின்னணியில் நிற்பவர்கள் போகப்போக முன்னணியில்நிற்பவர்களை தோற்கடித்து முன்னேறுவதைப்போன்று, மனித சமுதாயத்தின் வளர்ச்சி என்ற ஓட்டப்பந்தயத்தில், அதுவரை பின்னணியில் நின்ற ஐரோப்பியர்கள், சீனு, இந்தியா, ஈரான் எகிப்து முதலிய முன்னணியில் நின்ற நாடுகளைத் தோற்கடித்து முன்வரிசையில் வரத் தொடங்கினுர்கள். இந்தவெற்றியை அடைய அவர்களுக்கு உதவிய வளர்ச்சிப்போக்குகள்தான், மேலேஉள்ள பத்திகளில் ''கம்யூனிஸ்ட் அறிக்கை'' தனது பிரசித்திபெற்ற வார்த்தைகளால் சித்தரித்துள்ள முதலாளித்துவத்தின் வளர்ச்சி.

## ஏதனுல் இந்தப்பின்தங்கியநிலை?

இங்கு ஒரு கேள்வி எழுகிறது, அநேக நூற்றுண்டுகளாக முன்வரிசையில் நின்றிருந்த இந்தியா, முதலாளித்துவ வளர்ச்சிக் கட்டத்தில் எதனுல் பின்னுல் தள்ளப்பட்டது? மனித சமுதாயத்தின் வளர்ச்சி என்ற ஓட்டப்பந்தயத்தில் அதுவரை பின்னணியில் நின்ற ஐரோப்பிய நாட்டவர்கள் எதனுல் இந்தக்கட்டத்தில் இந்தியாவைப் பின்னுல் தள்ளி முன் வரிசையை அடைந்தார்கள்?

இந்தக் கேள்விக்கு தெளிவான பதில் தருவதற்கு உதவிகரமான உண்மைகள் எதுவும் அன்று காரல்மார்க்சுக்கு கிடைக்கவில்லை. அதனுல் அவர் இந்தக் கேள்விக்கு விடைகாண முயற்சிக்கவில்லை.

ஆனுல், மார்க்சின் காலத்திற்குப் பிறகு ஏராளமான ஆராய்ச்சியாளர்கள் எடுத்த பெரும் முயற்சிகளின் விளைவாக இந்தக்கேள்விக்கு விடை காண்பதற்குப் பயனுள்ள பல உண்மைகள் வெளிவந்துள்ளன. இவற்றை அடிப்படையாக வைத்துத்தான் நான் ''இந்திய வரலாற்றில் ஒரு உற்று நோக்கு'' நடத்தினேன். அதன் பயனுக நான் எடுத்த கணிப்புகளை (பண்டிதர்களின் விமர்சனங்களையும், இனிமேல் வெளிவர வேண்டிய புதிய உண்மைகளையும் அடிப்படையாக வைத்துச் செய்ய வேண்டிய திருத்தங்களுக்குட்பட்டு) கீழே தருகிறேன்.

(1) ஆக்கிரமிப்பாளர்களாக இந்தியாவிற்குள் நுழைந்த ஆரியர்கள், இங்குள்ள ஆரியரல்லாத சமூகங்களுடன் இணைந்து உருவாக்கிய புதிய உற்பத்தி முறையின் (விவசாயம்] பயனுக, ஆரியரல்லாத சம்பிரதாய குலவழி வர்க்கங்கள் ஒன்றன்பின் ஒன்ருக தகர்ந்து விட்டன. இந்த ஆரியரல்லாத சமூகத்தினர் பரஸ்பரம் தங்களுக்கிடையேயும், ஆரிய சமூகங்களுடன் இணைந்தும் வாழத் தொடங்கியதால் பல புதிய சமூகங்கள் உருவாயின.

(2) சம்பிரதாய குலவழி வர்க்கங்களின் வீழ்ச்சியும், உற்பத்தி முறையின் வளர்ச்சியும் ஏற்பட்டதன் விளைவாக சமூகம் அனைத்திற்குமுள்ள உற்பத்தித் திறன் மேலும் அதிகரித்தது. இதனுல், உற்பத்திமுறையிலுள்ள வேலைகளில் பல வேறுபாடுகள் ஏற்படலாயின. பல்வேறு வேலைகளைச் செய்கின்ற பல்வேறு பிரிவினர் என்ற வகையில் அவர்களுக்குள் வேலைப் பிரிவுகள் உருவாயின. அதோடு உற்பத்தித் திறன் அதிகரித்ததன் மூலம் உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களின் மொத்தத் தொகையும் பெருகிற்று. இவையெல்லாம் சேர்ந்துதான், சுரண்டலை அடிப்படையாகக் கொண்ட ஆரம்ப காலத்திலுள்ள ஓர் உற்பத்தி உறவுக்கு [நால் வகை ஜாதிப்பிரிவுகள்] பிறவி அளித்தன. இது படிப்படியாக உற்பத்தி முறையில் வளர்ச்சிக்கும் உற்பத்தித் திறனின் பெருக்கத்திற்கும் ஒப்ப விரிவடைந்து மிக மிக முக்கியமான ஒரு ஜாதி அமைப்பாகி விட்டது.

(3) பண்டைக்கால கிரேக்க நாடு ரோமாபுரி, மற்றும் சில மேற்காசிய நாடுகள் ஆகியவற்றில் உருவங்கொண்ட அடிமைமுறை அமைப்புக்கும், இந்தியாவில் உருவான ஜாதி-இன அமைப்புக்கும் இடையே அடிப்படையான வேறுபாடுகள் எதுவும் கிடையாது. அடிமைமுறை அமைப்பைபோன்றே,ஜாதி- இன அமைப்பிலுள்ள பிரதான அம்சம் சுரண்டல்—சுரண்டப்படல் என்னும் முரண்பாடு

இ. எம். எஸ். நம்பூதிரிபாட்

தான். ஓர் அமைப்பில் அடிமை என்ற பெயரை வெளிப்படையாகக் கூறிக்கொண்டுதான் மிகப் பெரும்பாலான மக்கள் சுரண்டப்படுகிருர்கள். மற்ருேர் அமைப்பில் ஜாதி என்ற திரையைப் பிடித்துக்கொண்டு சுரண்டப்படுகிருர்கள்—இந்த வேறுபாட்டைத்தவிர வேறு எந்த வேறுபாடும் இந்த இரு அமைப்புகளுக்கிடையே கிடையாது.

(4) ஆனல், ஜாதி இன அமைப்பு அமுலில் வந்தபோது, அதனை நிலைநிறுத்தவும் நியாயப்படுத்தவும் சில புதிய கருவிகள் உருவாக்கப்பட்டன. இதற்காகத்தான் மத நம்பிக்கைகள், மெஞ்ஞானங்கள் ஆகியவற்றின் மிகச்சிறப்பான ஒரு சட்ட அமைப்பு சுரண்டல் அமைப்பைச் சுற்றி எழுந்து வந்தது, இவ்வாறு அடிமை முறை அமைப்பின் உருவத்திலுள்ள சுரண்டலின் மத, மெஞ்ஞான சட்ட அமைப்பைவிட மாறுபட்ட வேருெரு சட்ட அமைப்பு இந்தியாவில் உருவம் பூண்டது. அதுதான் இந்து மதம், இந்துமத தத்துவ சாஸ்திரங்கள், இந்துமத கலாச்சாரம்—ஆகிய உருவங்களில் வெளியானது. இதைத்தான், இந்துஜாதி வெறியர்கள் ''புனிதமான பாரதீய கலாச்சாரம்'' என்று அழைக்கிருர்கள்.

(5) அடிமைமுறை அமைப்பு, ஜாதி—இன அமைப்பு என்ற இரு சுரண்டல் முறைகள்தான் அமுலில் இருந்த போதிலும், புராதன வரலாற்றுக் கட்டத்திலுள்ள இந்தியாவிலும் மேற்காசிய நாடுகளிலும் உள்ள உற்பத்தி முறைக்கு ஒரு பொதுத்தன்மை இருந்தது, சுருக்கமாகக் கூறினுல், இந்த இரண்டு அமைப்பிலும் உற்பத்தியாளர்கள் தங்கள் சொந்த தேவைக்காகத்தான் உற்பத்தியில் ஈடுபட்டார்கள். உற்பத்தி செய்யப்பட்ட பொருளில் மிக சொற்பமான ஒரு பகுதியைத்தான் வேருெருவருக்கு விற்பனை செய்வார்கள். அதே போல் தங்கள் சொந்த உபயோகத்திற்குத் தேவையானபொருட்களில் மிக சொற்பமான ஒரு பகுதியைத்தான் மற்றவர்களிடமிருந்து வாங்குவார்கள். ''சரக்கு உற்பத்தி'' என்றழைக்கப்படுகின்ற உற்பத்தி முறை இந்த இரண்டு அமைப்பிலும் பெரும்பாலும் கிடையாது என்பதுதான் இதன் பொருள்.

## இந்திய சமூக அமைப்பின்சிறப்புஎன்ன?

(6) ஆனுல், ஜாதி—இன அமைப்பானது, சரக்கு உற்பத்தியின் வளர்ச்சியை, அடிமை அமைப்பிலுள்ள வளர்ச்சியைவிட, மிகவும் மந்தமான நிலைக்குத் தள்ளியது. ஒவ்வொரு கிராமத்திலும் வாழும் மக்களின் சாதாரண வாழ்க்கைக்குத் தேவையான பொருட்கள் அனைத்தையும் உற்பத்தி செய்வது, இந்த பொருட்கள் ஒவ்வொன்றையும் உற்பத்தி செய்ய நிச்சயிக்கப்பட்ட ஒவ்வொரு ஜாதியும் இருந்து வருவது, இந்த அடிப்படையில் சுயதேவைப் பூர்த்தி[பூரண) கிராமங்களும் ,அவற்றின் பிரிக்கமுடியாத பகுதியாக ஜாதி அமைப்பும் உருவம் பூண்ட ஒரு நிலைதானே இந்திய சமூக அமைப்பின் சிறப்பு? இந்த அமைப்பில், கிராமத்திலுள்ள பொருட்களை வெளியிடங்களில் கொண்டு சென்று விற்பனை செய்ய வேண்டிய தேவையோ, தங்கள் கிராமத்திற்கு தேவையான பொருட்களை வெளியிடங்களிலிருந்து வாங்க வேண்டிய தேவையோ பெரும்பாலும் இல்லாமலாகி விட்டது.

[7] அதே வேளையில் அடிமை அமைப்பில் நிலைமை இந்த அளவுக்கு மோசமாக இல்லை. இந்த அமைப்பில் அடிமைகளைச் சுரண்டி, அதன் மூலம் கிடைக்கின்ற உபரிப் பொருட்களை விற்பனை செய்வதோடு அதன் மூலம் கிடைக்கின்ற பணத்தைப் பயன்படுத்தி ஆடம்பர வாழ்க்கை நடத்துவதற்கான ஒரு மோகம் சுரண்டல் வர்க்கத்திற்கு ஏற்பட்டிருந்தது. இதனுல் சுயதேவைப் பூர்த்தி பெற்ற கிராமமும், ஜாதி—இன அமைப்பும் அமுலில் இருக்கின்ற இந்தியாவைவிட அதிகமான சரக்குப் பரிமாற்றம், அடிமை அமைப்பு அமுலில் இருந்த மேற்காசியாவில் நடந்தது. இதன் விளைவாக, இந்த நாடுகளிலுள்ள சுரண்டல் வர்க்கத்திற்கு, சரக்குகளாக மாற்றக்கூடிய பொருட்களை அதிகமாக கொள்ளையடிக்க வேண்டிய தேவை ஏற்பட்டது.

எனவே, இந்த நாடுகளில் உள்ளவர்கள் பெருமளவில் இந்தியாவை ஆக்கிரமித்து வந்தார்கள். அவர்களை எதிர்த்து தோற்கடிப்பதற்கு பூரண கிராம அமைப்பை அடிப்படையாகக் கொண்ட இந்திய சுரண்டல் வர்க்கங்களால் இயலவில்லை.



## அடித்தளத்தை நொறுக்க ஆக்கிரமிப்பாளர்களால் முடியவில்லை

(8) ஆனல், ஜாதி—இன அமைப்பு, சுயதேவைப் பூர்த்திபெற்ற கிராமங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் உருவான இந்திய சமூக அமைப்பின் அடித்தளத்தை நொறுக்குவதற்கு இந்த ஆக்கிரமிப்பாளர்களால் முடியவில்லை. முகமது நபி மதத்தின் உத்வேகத்தினுல், முஸ்லீம் அல்லாதவர்களின் மத நம்பிக்கைகளைத்தெறிய ''புனித யுத்தம்'' நடத்த முயன்ற இஸ்லாமிய ஆக்கிரமிப்பாளர்களுக்குக்கூட இந்தியாவிலிருந்த ஜாதி—இன அமைப்பையோ, பூரண கிராம வாழ்க்கை அமைப்பையோநாசம்செய்யஇயலவில்லை. இந்த மதத்தவர்களுக்கிடையே இருந்த பல்வேறு ஜாதியினரோடு, இந்தியாவில் ஒரு ''முஸ்லீம் ஜாதி'' யும் தோன்றியது.

[9] இது ஒருபுறமிருந்தாலும், உற்பத்தித் துறையில் முன்பு இருந்ததைவிட அதிகமான உற்பத்திப் பெருக்கத்திற்கு இந்த ஆக்கிரமிப்பு பேருதவி புரிந்தது. ஆனுல், இதுகூட சமூகம் முழுவதிலும் பரவ முடியவில்லை. சுரண்டல் வர்க்கங்களின் அன்ருடத் தேவைகளுக்கான ஆடம்பரப் பொருட்கள்தான் ''சரக்குகள்'' என்ற வகையில் அதிகமாக விற்பனையானது. அதேபோல், உற்பத்திப் பெருக்கத்தையொட்டி சுரண்டும் வர்க்கங்கள் அதிகமானபணத்தைக் கொள்ளையடித்து கைவசப்படுத்த ஆரம்பித்ததும், அவர்கள் சந்தையில் விற்பனை செய்வதும் அதிகரித்தது. இவ்வாறு சுரண்டும் வர்க்கங்களின் மட்டத்தில் சரக்கு வாங்குவதும், விற்பதும் மிகவும் பெருகியது. ஆனுல், இது சமுதாயத்தின் மேல்மட்டத்துடன் மட்டும் நின்று விட்டது. கீழ்மட்டத்தில் உள்ள மக்களிடையே சரக்கு உற்பத்தியும், தங்கள் தேவைகளுக்குச் சந்தையிலிருந்து பொருட்களை வாங்குவதும் மிகக் குறைவாகவே நடந்து வந்தது.

[10] இவ்வாறு, சிறுபான்மையினரான சுரண்டும் வர்க்கத்தினரின் வாழ்க்கையைத் தவிர இந்திய சமூக அமைப்பு முழுவதும் பூரண கிராம வாழ்க்கை முறையாகத்தான் இருந்தது. இந்த அமைப்பைத் தகர்த்தெறிவதற்கு முகமது நபியின் காலத்திற்கு முன்போ, அவருடைய காலத்திற்குப் பிறகோ மேற்காசியாவிலிருந்துவந்த ஆக்கிரமிப்பாளர்கள் எவருக்கும் முடியவில்லை. ஆக்கிரமிப்பாளர்கள், படைத்தளபதிகள், பேரரசர்கள் போன்றவர்களின் இந்தப் படையெடுப்புகள், இந்திய கிராமப் பிரதேசங்களில் உற்பத்தி செய்யப்படுகின்ற உற்பத்தி உறவுகளிலோ, சமூக அமைப்பிலோ எவ்வித மாற்றமும் ஏற்படுத்தப் பயன்படவில்லை.

(11) இந்தக் கட்டத்தில்தான், ஐரோப்பிய வியாபாரிகளின் வருகை முதல் ஆங்கிலேயரின் ஆட்சி ஏற்பட்டது வரை நடந்த நிகழ்ச்சிகள், பழைய நிகழ்ச்சிகளிலிருந்து முற்றிலும் வேறுபடுகிறது. ரிக்வேதத்தை எழுதிய ஆரியர்களிலிருந்து மொகலாயப் பேரரசர்கள் வரை உள்ள அந்நிய நாட்டவர்களைவிட முற்றிலும் வேறுபட்ட, புதிய குழுக்கள் (ஐரோப்பிய வியாபாரிகள்] இந்தியாவுக்கு முற்றிலும் ''அன்னியமான'' ஒரு சமுதாயப் பொருளாதார அமைப்பின் விதைகளையும் தங்களுடன் கொண்டு வந்தார்கள். ''பாரதீய கலாச்சாரத்தின்'' ஆணிவேரை (பூரணகிராம அமைப்பும் ஜாதி—இன அமைப்பும்) வெட்டி வீழ்த்துகின்ற சரக்கு உற்பத்தி முறையின் ஏஜெண்டுகளாக அவர்கள் இந்தியாவுக்குள் நுழைந்தார்கள்.

## சரக்கு உற்பத்தியாளர்கள்

இந்த ஐரோப்பிய வியாபாரிகள் பழைய இந்தியமக்களை போன்று, தங்கள் நாட்டிலுள்ள சுரண்டும் வர்க்கங்களின் ஆடம்பர வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களை வாங்குகின்ற, தங்கள் நாட்டில் உற்பத்தி செய்யப்படுகின்ற பொருட்களில் ஒரு சிறு பகுதியை இங்கு கொண்டு வந்து விற்பனை செய்கின்ற சாதாரண வியாபாரிகள் அல்ல. மாருக உலகில் எந்த மூலைமுடுக்குகளிலும்சென்று அங்கு அமுலில் இருந்த பூரண கிராம அமைப்புகளை அழித்து, எல்லா மக்களையும் உலகச்சந்தையில் விற்பனை பொருட்களை உற்பத்தி செய்பவர்களாகவும். அந்தப் பொருட்களை எதிர்பார்த்து வாழ்கின்ற வாழ்க்கையாளர்களாகவும் மாற்றுகின்ற ஒரு புதிய சமூக அமைப்பின் [முதலாளித்துவ அமைப்பின்] பிரதிநிதிகளாக இருந்தார்கள்.

தங்கள் சொந்த நாட்டிலேயே முழுமையான ஒரு தொழிற்புரட்சி நடத்தி, உலகில்உள்ள எல்லாப் பொருட்களையும் செலாவணிச் சரக்குகளாக மாற்றுவது என்ற தங்களின் வாழ்க்கைக் குறிக்கோளுடன்தான் அவர்கள் இந்தியாவிற்கும் வந்தார்கள். இவர்களையும், இவர்களின் சமூக அமைப்பையும் எதிர்த்து வெற்றி கொள்வதற்கு, ''பாரதீய கலாச்சாரத்தின்'' இரு உருவங்களான இந்து மதத்திற்கோ, இஸ்லாம் மதத்திற்கோ வலிமை இல்லை,

இவ்வாறு முதலாளித்துவத்தின் புதிய அந்நிய சக்தியின் முன், அன்று வரை இந்தியாவை ஆக்கிரமித்து அடிபணியச் செய்து ஆட்சி புரிந்து வந்த இந்தியமயமான எல்லா ஆட்சியாளர்களும் அடிபணிந்து விட்டார்கள். ''இந்தியர்களுடையது'' என்று சொல்லக்கூடிய இறுதிப் [மொகலாய) பேரரசு தகர்ந்து போயிற்று. முற்றிலும் அந்நியமான ஒரு புதிய(பிரிட்டிஷ்) பேரரசு உதயமாயிற்று.

கலாச்சார ரீதியான ''மிகப்புராதன'' மனித சமுதாயத்தின் வளர்ச்சி என்ற ஓட்டப்பந்தயத்தில் ஒரு காலகட்டம் வரை முன்னணியில் நிற்க உதவிய போதிலும், மனித சமுதாயத்தின் வரலாற்றில் மிக நவீன கட்டத்தில் (முதலாளித்துவ யுகத்தில்] இந்த ''மிகப்புராதன'' இந்தியாவை மிகவும் பின்னணியில் தள்ளி விட்டது. ஒரு காலத்தில் பெருமைக்குரிய சொத்துக்களை உருவாக்கிய ''மிகப் புராதனம்'' பிற்காலத்தில் ஒரு சுமையாக மாறி விட்டது.

## கிரவுஞ்ச வதம்

— தனிகைச் செல்வன் —

மூவாயிரம் ஆண்டுகளுக்கு
முந்திய கொடுமைகளை
முப்பதாண்டுக் காலமாக
ஜீரணித்து வரும் தேசத்தின் தலைநகரம்—
மாட்ரிட்!

அதோ—மரண மேடை!
இதோ—துப்பாக்கிப் படை!
இங்கே—நம் தோழர்களின் நடை!
அந்த ஆறு இளைஞர்களும்
பலிபீடத்தில் நிறுத்தப்படுகிறார்கள்—
அகிலமே அவர்களுக்கு ஆதரவாகத்
திரண்டிருக்கிறது—எனத் தெரிந்திருந்தும்!

'அது நடைபெறுகிறது—
உலகம் அவர்களிடம் விடைபெறுகிறது!
அந்த ஆறுபேரிடம் கடைசியாகக் கிடைத்த
'ஆறுமுக' தரிசனம்!
ஓ! எவ்வளவு கம்பீரமானது
காந்தர்வமானது என்று
கற்பனை செய்வோம், வாரீர்!

அந்த அறுவரில்—
இருவர் இளம் பெண்கள்
இருபதே வயது!
முப்பது வயதும் முதிராத மற்றவர்களின்
முறுக்கேறிய உறுதியைக் கண்டபோது,
1916—ஈஸ்டர் தினத்தில்
வெடித்தெழுந்த அயர்லாந்து இளைஞர்களின்
வரலாறு நெருடாமல் போகாது!
நெருடுகிற அந்த நினைவில்—
'நெருடா'வின் நினைவும் நெளிகிறது!
இதைக்—காவியமாய்ச்செய்ய
அந்தப்—'பாவி மகன்' பாப்லோவும்
இல்லாமல் போனுனே
என்ற நெடுங்கவலை.

∴

கிரவுஞ்ச வதத்தில்
'ஆறுமுகம்' தோற்றதில்லை—கந்தபுராணத்தில்!
இந்தப் பிரபஞ்ச வதத்தில்
'ஸ்பானிஷ்' ஆறுமுகம்
பாரதத்தின் ஆயிரம் முகங்களில்
ஒளிசேர்க்கை அடையட்டும்!
அறுபடை வீடு நமக்கெதற்கு?
உலகின்—'அரை படை வீடு' நம்முடையதே!
இந்தப்
பின்னணியின் பலத்தில்தான்
'பிராங்கோக்களை' முறியடிக்கப் போகிறோம்!
ஜெனரல் பிராங்கோவை மட்டுமல்ல—
ஜெகம் முழுதும் உள்ள பிராங்கோக்களையும்தான்!

## கேரள ஆளுங் கட்சியினரின்...

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

அவர்கள் ரத்தம் சிந்தியும் தியாகம் செய்தும் பெற்ற உரிமையை, தங்களுடைய ''அன்பு நிறைந்த சட்ட''த்தால் ஏற்பட்ட விளைவு எனக் காட்டுவதற்கு கூட்டணி அரசாங்கத்தினர் முயற்சிக்கின்றனர்.

வீட்டுமனை பிரச்சினையில் மட்டும் கூட்டணி அரசாங்கம் இவ்வாறு நடந்துகொள்ளவில்லை, விவசாயத் தொழிலாளர் பிரச்சினையிலும் சரி,ஏனைய வெகுஜன மக்களின் பிரச்சினைகளிலும் சரி கூட்டணி அரசாங்கம் இதே மாதிரித்தான் நடந்து கொண்டது.

ஒன்றுபட்ட விவசாயத் தொழிலாளர்கள் தங்களுடைய போராட்டங்களின் மூலம் கூலியைக் கூட்டுமாறு நிலப்பிரபுக்களை நிர்ப்பந்தித்தனர். வேலை நேரத்தைக் குறைக்கச் செய்தனர். வேறுபல அனுகூலங்களையும் ஒப்புக்கொள்ளச் செய்தனர்.

இவைகளெல்லாம் முடிந்த பிறகுதான் கேரள கூட்டணி அரசாங்கம், விவசாயக் கூலிகளை நிர்ணயிக்கும் சட்டமொன்றை நிறைவேற்றியுள்ளது அதுவும், விவசாயத் தொழிலாளர்கள் போராடிப் பெற்ற கூலியை விடக்குறைவாகவே அக்கூலிச் சட்டத்தில் கூலிகள் பெறப்பட்டுள்ளன:

இது விவசாயத் தொழிலாளர்கள் மீது ''அவர்கள் கொண்டிருந்த அன்பி''னுல் அவர்கள் அளித்த ''ஆசீர்வாதம்'' என இன்னமும் சொல்லிக் கொள்கின்றனர்.

### கல்விச் சீர்திருத்தம்

கல்விச் சீர்திருத்த விவகாரத்தில், அதில் சம்பந்தப்பட்ட பகுதியினராகிய மாணவர்களையும், ஆசிரியர்களையும் ஒதுக்கி வைத்தார்கள். அவர்களைத்தாக்கினுர்கள். இதன் பிறகுகூட ''முற்போக்கு சீர்திருத்தங்''களை புகுத்திக் கொண்டிருப்பதாக கூட்டணி அரசாங்கத்தினர் கூறுகின்றனர். கல்வி ஸ்தாபனங்களுக்குள் மாணவர்களை அடித்து நொறுக்கிக்கொண்டே, ஏனைய உழைப்பாளி மக்கள் பிரிவினர்களின் போராட்டத்தை ஒடுக்குவது போலவே ஆசிரியர்களின் போராட்டங்களையும் ஒடுக்கிக் கொண்டே கல்வி ஸ்தாபனங்களின் தனியார்...நிர்வாகிகளுக்கு எதிராக வெறும் வார்த்தைச் சண்டை நடத்திக் கொள்கிருர்கள். பின்பு தனியார் நிர்வாகிகளின் கொள்கைகளிடம் சரண் அடைகிருர்கள். இவ்வாறு நடந்து கொண்டே தங்களைத் தாங்களே கலப்படமற்ற புரட்சிவாதிகள் எனக் கூறிக்கொண்டு அழகு செய்கிருர்கள்.

விவசாயம், தொழிற்சாலை, கல்வி ஸ்தாபனம், அதேமாதிரியான வேறு பல துறைகளில் உழைக்கும் மக்களை வருந்தச் செய்யக்கூடிய போலீஸ் கொள்கை. போலீஸ் கொள்கை சம்பந்தமாக 1957—59-ம் வருடகால கேரள அரசாங்கம் ஒரு ஜனநாயகக் கொள்கையை எடுத்தது. அதே கொள்கை 1967—69-ல் வெற்றிபெற்ற (மார்க்சிஸ்ட் கட்சி தலைமையிலான] கூட்டணி அரசாங்கமும் பின்பற்றியது. அக்கொள்கைநாடு முழுவதிலுமான செல்வாக்கைப்பெற்றது. அக்கொள்கைக்கு இரண்டு அம்சங்கள் இருந்தன. அவை என்னவெனில், லாக்—அப் கொடுமைகளுக்கு முடிவு ஏற்படுத்தப்பட்டதும், 1957-ம் ஆண்டுவரை பொது நடைமுறையாக இருந்துவந்த, சுய நல கும்பல்களுக்குச் சாதகமாக இருந்துவந்த போலீஸ் நடவடிக்கைகள் நிறுத்தப்பட்டதுமாகும். ஆனுல்,அச்சுதமேனன் ஆட்சிக்கு வந்த பிறகு 1957-க்கு முன்பு இருந்தநிலை மீண்டும் வந்து விட்டது,

லாக்—அப் சித்திரவதை மீண்டும் நடைமுறைக்கு வந்துவிட்டது என்பதுமட்டுமல்லாமல், கொலைகளுக்கும் கற்பழிப்புகளுக்கும் உரிய கேவலமான இடமாகி விட்டது,

லாக்—அப்சித்திரவதைகள் கூடாது என சுற்றறிக்கை விடுகிருர் மத்திய உள்துறை அமைச்சர் பிரமானந்தரெட்டி. அவரது கட்சியான காங்கிரஸ் கட்சியை சேர்ந்தவர்தான் கேரள உள்துறை அமைச்சர்.

சுருக்கமாகச் சொன்னுல், 1957—59, 1967—69 வருடகாலங்களில் அமைந்திருந்த கேரள அரசாங்கங்களின் மூலம் மக்கள் பெற்ற ஜனநாயக உரிமைகளை சூறையாடி விட்டதால்தான் கேரள கூட்டணி அரசாங்கம் 5 வருட காலமாக நீடித்திருக்கிறது. இந்த அடிப்படையில்தான் அவர்களது அரசாங்கம் முழுக்காலம் நீடித்ததற்கு விழா கொண்டாடுகிருர்கள். அந்த அரசின் காலம் தான் இன்னும் நீடிக்கப்பட்டுள்ளது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6-1பைபாஸ்ரோடு, மதுரை625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.